




எப்போ என்
டீச்சரிடமிருந்து
"வெரிகுட்" வாங்கறேனோ,
அப்போ அம்மா எனக்குத்
தருவாங்க... மிக மிகப்
பிடிச்சமான ஒண்ணே.
என்னதுன்னு தெரியுமா
எனக்குப் பிடிச்ச ரஸ்னா.



I love you Rasna




Mudra:A.EA/MRS463 Tam






# சர்க்கஸ் மோசக்

**சா**சகங்கள் புரியும் நேரம் வந்துவிட்டது. ஒன்றல்ல, மர்மங்கள் பல. வாருங்கள், இப்புதிர் விடுவிக்க தயாராகி விரைவோம். சௌத்ரிகளின் குழந்தை காணமல் போய் விட்டது. சர்க்கஸ் மோசக் காரனின் மற்றுமொரு மோசச் செயல். சர்க்கஸில் இதற்கு யார் காரணம்? BSA SLR துப்பறியும் புலிகள் தமக்கே உரித்தான வீரத்துடன் ஒரு பயங்கர குற்ற வாளியை பிடிக்கின்றனர்.



ப்ரியங்கா பள்ளிக்கூடத்திலிருந்து வீடு திரும்பும் வழியில் ஒரு சிகப்பு நிற கார் அவளது அருகில் திடீரென்று நின்றது. அடுத்தகணம் அவள் காரினுள் இழுக்கப்பட்டாள். சிறிது நேரத்தில் மங்கலான, மெழுகுவர்த்தி எரிந்து கொண்டு இருக்கும் ஓர் அறையில் இருந்தாள். மிருகங்களின் உறுமல் சத்தம் கேட்கவே, "இதென்ன பசி எடுத்த சிங்கங்களின் கர்ஜனை போலிருக்கிறதே" என்று நினைத்தாள்

கவலையில் ஆழ்ந்திருந்த சௌத்ரிக்கு, எட்டு மணிக்கு தொலைபேசி மூலம் ஒரு மிரட்டல் செய்தி வந்தது. "உங்கள் மகளை உயிருடன் பார்க்க வேண்டுமெனில் ஞாயிறு காலை 11-45க்கு வெள்ளை ஸுட் அணிந்து ரூ2,50,000ஐ சர்க்கஸுக்கு கொண்டு வரவும்" என்று அதட்டும் குரலில் முழங்கினான் வில்லன்.

### வந்துவிட்டனர் BSA SLR துப்பறியும் புலிகள்

வெள்ளி: இரண்டுநாள் கூட இல்லை, என்று கணக்கிட்டான் விபுல். இடைத்தது யோசனை. "அந்த இடத்தை ஒரு நோட்டம் விட்டு வருவோமா?" "சரி நம் BSA SLRல் செல்வோம்" என்றான் ரால்ஃப்.

கும்மிருட்டு. மேடுபள்ளம். ஆங்காங்கே
லாவகமாக ப்ரேக் அடித்து, துப்பறியும்
புலிகள் தம் BSA SLR-களில் விரைந்தனர்.
திடீரென காலடி சத்தம். "சீக்கிரம்! சுவருக்
குப் பின்னால் மறைந்து கொள்ளுங்கள்"
என்று எச்சரித்தாள் பூஜா. "ஞாயிறன்று
ரூ.2,50,000 நம் கையில் இல்லை எனில்..."
என்று கர்ஜித்தது ஒரு குரல். தொடர்ந்து
கேட்டது உரத்த சிரிப்பொலி. துப்பறியும்
புலிகள் மறைவிடத்திலிருந்து வெளியே வந்த
போது 'J' எழுத்து போடப்பட்ட கைக்குட்டை
ஒன்றைக் கண்டனர். "சரி போவோம். இதுதான்
முக்கியமான தடயமாக இருக்கக்கூடும்"
என்றபடி தம் BSA SLR-களில் பறந்தனர்.



சனி: "J" இது யாருடைய கைக்குட்டை?
இதன் மர்மமென்ன? இதை வைத்து
ப்ரியங்காவை கண்டுபிடிக்க முடியுமா?"
என்று வியந்தான் விபுல்.

# காரனின் மர்மம்

ஞாயிறு: பதட்டமுற்ற திரு சௌத்ரி
வெள்ளை ஸூட் அணிந்து ரூ.2,50,000-த்துடன்
— அத்தனையும் புதிய நூறு ரூபாய் நோட்டுக்கள் —
சர்க்கஸுக்குச் சென்றார். காட்சி துவங்கியது. பார்
விளையாட்டு கலைஞர். அடுத்தபடி வந்தான் தனது
சிரிப்பூட்டும் தந்திரங்களுடன் கோமாளி. திடீரென
மேலிருந்து ஒரு கைக்குட்டை விழுவதை துப்பறியும்
புலிகள் கண்டனர். வெள்ளி இரவு கிடைத்த கைக்
குட்டையில் இருந்தது போலவே இதிலும் 'J'.
"சௌத்ரி மாமா, பார்த்தீர்களா?" என்று கூச்ச
லிட்டனர் துப்பறியும் புலிகள். "ம்.. கூப்பிடு
போலீஸை. BSA SLR-ல் விரைந்து
இன்ஸ்பெக்டர் மாமாவை வரச்சொல்..."

மோசக்காரனும், அவனது கூட்டாளிகளும்
[illegible]பட்டனர். ப்ரியங்கா மீட்கப்பட்டாள்.

மோசக்காரன் பிடிபட உதவிய தடயம் கிடைத்த
தற்கு முக்கிய காரணம் அவர்கள் வெள்ளி இரவு தம்
BSA SLR-களில் மேற்கொண்ட பயணம்தான்.

மோசக்காரன் யார்? உங்களுக்குத் தெரிந்ததா?

J

மோசக்காரன் யார் என்பதை நீங்கள்
'பைத்தியக்காரன் வாலேஸிச்சின் மர்மம்'
படிக்கும்போது தெரிந்துகொள்வீர்கள்.
அதுவரையில் BSA SLR-ல் உல்லாச
சவாரி தொடரட்டும்.





**BSA SLR**

*Get Set 'n' Go on an adventure*

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## எரியும் எண்ணெய்க் கிணறுகள்

ஈராக் நாட்டுப் படைகள் குவைட்டிலிருந்து வெளியேறி விட்டதால் வளைகுடாப்போர் முடிந்தது. அப்படைகள் குவைட்டை விட்டு வெளியேறுமுன் அங்குள்ள நூற்றுக்கணக்கான எண்ணெய்க்கிணறுகளுக்குத் தீவைத்தன. அவை இன்னமும் எரிந்து கொண்டு தினமும் கோடிக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள எண்ணெய் அழிந்து கொண்டிருக்கின்றது. அக்கிணறுகளின் தீயை அணைக்க இன்னமும் பல ஆண்டுகள் பிடிக்கும் என வல்லுனர்கள் கருதுகிறார்கள்.

குவைட்டின் எண்ணெய்க்கிணறுகளுக்கு தீ மூட்டியதால் அந்நாட்டிற்குப் பெருத்த நஷ்டத்தை விளைவித்தவிட்டதாக ஈராக் கருதுகிறது. அக்கிணறுகள் குவைட்டிற்கு சொந்தமான போதிலும் உலகம் முழுவதும் பயனடைய இயற்கை அளித்த வரப்பிரசாதமே அவை. அவற்றின் அழிவு உலகிற்கே மாபெரும் இழப்பு. எனவே உலக முழுவதும் மானிடர்களுக்குப் பயன்படும் இத்தகைய இயற்கை வளங்களில் எல்லா நாடுகளுக்கும் சொந்தமானவை எவை என்றும் அந்தந்த நாடுகளுக்குச் சொந்தமானவை எவை என்பதையும் தீர்மானித்து அவற்றைப் பாதுகாக்கத்தக்க திட்டம் தீட்ட அனைத்து நாடுகளும் முற்படவேண்டும்

மதிமுகம்: 88 மே 1991 புன்னகை: 5

தனிப்பிரதி: ரூ. 3-00 வருட சந்தா: ரூ. 36-00










# மேகி கிளப் பரிசுகள், இலவசம். வனவிலங்குகளுடன் பெறுவீர், உல்லாசம்!

குழந்தைகளே! மேகி கிளப்பில் சேருங்கள். வருடம் பூராவும் கொண்டாட்டம் பெறுங்கள். நியூஸ் லெட்டர்கள், பரிசுகள், விளையாட்டுகள் இன்னும் நீங்கள் செய்வதற்கு எத்தனை எத்தனையோ!

இந்த சின்னத்தை மேகி நூடுல்ஸ் 5 காலி உறைகளின் முன்பக்கத்திலிருந்து வெட்டி எடுத்து எங்களுக்கு அனுப்புங்கள். உங்கள் பெயர், விலாசத்துடன் உங்களுக்குப் பிடித்த பரிசையும் குறிப்பிட்டு எழுதுங்கள். நீங்கள் மேகி கிளப் உறுப்பினராக இருந்தால் உறுப்பினர் எண்ணையும் குறிப்பிட மறந்துவிடாதீர்கள். இதுவரை உறுப்பினர் ஆகவில்லை என்றால் இப்போது ஆகலாம்.

மேலே குறிப்பிட்ட விலாங்களை அனுப்பும்போது, உறுப்பினர் ஆக விரும்புவதாகவும் எழுதுங்கள். நாங்கள் உங்கள் பரிசுப் பொருளுடன் இலவச மேகி கிளப் உறுப்பினர் அட்டையையும் அனுப்புவோம்.

எங்கள் விலாசம் :
**மேகி கிளப்**
தபால்பெட்டி எண் : 5788,
புது டில்லி-110 055.



மேகி "ஆபரேஷன் வைல்ட்லை..ப்" விளையாட்டில் வனவிலங்குகளைக் காப்பாற்றுங்கள்!



மேகி "ஜூ ஜங்கிள்" மூலம் சொந்தமாக ஒரு காட்டை உருவாக்குங்கள்!



ஆர்ச்சி காமிக்



மேகி "பார்ட்ஹவுஸ்" உருவாக்குங்கள்!



மேகி வேர்ல்ட் ஆ..ப் அனிமல்ஸ் வினாடி வினா! நீங்கள் பெறும் ஒவ்வொரு 3 இலவசப் பரிசுகளுக்கும் உங்களுக்கு மேகியின் "வேர்ல்ட் ஆ..ப் அனிமல்ஸ்" வினாடி வினாவை உங்களுக்கு நாங்கள் அனுப்புவோம். அதில் வன விலங்குகளைப் பற்றிய வியப்பூட்டும் தகவல்கள் நிறைந்துள்ளன. விளையாட்டில் விவரங்கள் தரப்பட்டுள்ளன.







HTA 7105TAM




பாரசீக வளேகுடாப் போர் முடிந்தது. இது மிகவும் நிம்மதியைத் தருவதாகும். இதில் யாரும் மகிழத்தக்க அம்சம் எதுவும் இல்லே. ஏனெனில் இரு நாடுகளுக்கிடையே மோதல் ஏற்பட்டால் பேச்சு வார்த்தைகள் வாயிலாக மற்ற நாடுகள் முயன்று சமாதானத்தை நிலேநாட்டும் இக்காலத்தில் இந்தப் போர் துவங்கியது துரதிர்ஷ்ட வசமேயாகும்.

உலக அமைதிக்காகப் பாடுபடும் அமைப்புகளில் ஐக்கிய நாடுகள் சபை முதலிடம் வகிக்கிறது. வளே குடாப்பகுதியில் அமைதியை நிலே நாட்ட ஐக்கிய நாடுகள் சபை செய்த முயற்சி பற்றிச் சற்று ஆராய்வோம்.

உலக நாடுகளிடையே அமைதியை நிறுவுவதைத் தன் முதல் நோக்கமாகக் கொண்டு 1945 அக்டோபர் 24ம் தேதி ஐக்கிய நாடுகள் சபை உருவாகியது. உலகின் சிறிய, பெரிய நாடுகள் எல்லாம் எவ்விதப் பாகுபாடும் இல்லாமல் இதில் அங்கம் வகிக்கலாம். வருங்காலச் சந்ததியினரைப் போர் அபாயத்திலிருந்து பாதுகாக்கவே பாடுபடுவது தன் முக்கிய குறிக்கோள் என அது தன் சாசனத்தில் தெளிவாகக் கூறியுள்ளது.

ஈராக் தன் அண்டைச் சுதந்திர நாடான குவைட் மீது திடீரெனப் பாய்ந்து அதைத் தன வசப்படுத்திக் கொண்டது. குவைட்டை விட்டு ஈராக் வெளியேற வேண்டுமென்று ஐக்கிய நாடுகள் சபை பல முறை கோரியது ஆனல் ஈராக் இதனே ஏற்காமல் பிடிவாதம் பிடித்தது. அதனல் குவைட்டை விடுவிக்கப் படைப்பலத்தை உபயோகிப்பது என நேசநாடுகளின் கருத்தை அது அங்கீரித்தது. இதற்கான தீர்மானமும் அச்சபையில் நிறைவேறியது. இந்த நேச நாடுகளின் படைகளுக்கு அமெரிக்கா தலேமை தாங்கியது. 30 நாடுகள் இதற்கு உதவின. எகிப்து பிரான்ஸ் சௌதி அரேபியா, முதலிய நாடுகள் தம் படைகளே அனுப்பின. கனடாவும் ஜெர்மனியும் தன் ஒத்துழைப்பை அளித்தன.

குவைட்டை விடுவிப்பதே போரின் முதல் நோக்கம், ஈராக்கைத் தோற்கடிப்பது அல்ல. குவைட் மீண்டும் சுதந்திர நாடாகத் திகழவே நேச நாட்டுப் படைகள் போரில் இறங்கின. முடிவில் அந்த நோக்கத்தையும் அடைந்து விட்டன.

குவைட் சுதந்திர நாடாகியது. ஆனல் இதற்காக ரத்தம் அதிக அளவில் சிந்த வேண்டியதாயிற்று. சுற்றுப்புறச் சூழல் மாசுபட்டது. பொருட்சேதமும் மக்கள் சேதமும் மிக அதிக அளவில் ஏற்பட்டது. முன்னதாகவே ஈராக் ஐக்கிய நாடுகள் சபையின் தீர்மானங்

களை ஏற்று நடந்திருந்தால் இவ்வளவு நஷ்டம் ஏற்பட்டிருக்காது. ஈராக் இன்னமும் ஐ.நாவின் உறுப்பு நாடே! உலகில் அமைதியை நிலைநாட்ட இன்னமும் ஐ.நா சபை வலுவானதாக இருக்க வேண்டும் என்பதை இப் போர் உணர்த்திவிட்டது.

இந்தப்பலவீனத்தைப் போக்க உலக நாடுகள் சிந்திக்க வேண்டும். இனிமேலாவது இத்தகைய மோதல்கள் ஏற்படாமல் அவை பார்த்துக் கொள்ள வேண்டும்.






சதாம் உசைன்



ஜார்ஜ் புஷ்



# தேவதையின் வரம்

படியூரில் பழனி என்ற விவசாயி தன் மனைவி பச்சையுடன் வாழ்ந்து வந்தான். அவர்களுடைய ஒரே மகன் பரமன் . அவர்களுக்கு ஒரு சிறிய பூந்தோட்டம் இருந்தது. பழனியும் பச்சையும் அதில் பலவித பூச்செடிகளை வைத்து அவற்றைக் கண்ணும் கருத்துமாக வளர்த்து வந்தார்கள். அவர்கள் நட்ட எந்த செடியும் வாடியோ, வராமல் போனதோ இல்லை. பரமனின் தாய் பச்சை அது வனதேவதையின் அருள் எனப் பரமனிடம் கூறிப் பெருமிதம் அடைந்து வந்தாள்.

ஒரு முறை பச்சை கடும் நோயால் படுத்து விட்டாள். பழனியிடம் அவளுக்கு வைத்தியம் செய்யப் பணம் இருக்கவில்லை. எனவே அவ்வூர் வட்டிக் கடை வைரவனிடம் கடன் வாங்கப் போனான். வைரவன் வட்டிக்கு வட்டி வாங்குபவன். அவன் பழனியின் பூந்தோட்டத்தின் பேரில் நூறு வராகன் கடன் கொடுத்தான்.

பழனி அந்தப் பணத்தைத் தன் மனைவியின் வைத்தியத்திற்குச் செலவு செய்தும் பயனில்லை. அவளது நிலை மோசமாகி விட்டது. தான் இனிப் பிழைக்கப் போவதில்லை என அறிந்த பச்சை தன் மகனை அழைத்து ''பரமா! வன தேவதை கருணைக் கடல். அவளை நீ என்றும் மறக்காதே'' என்று கூறி உயிர்விட்டாள்.

ஒரு வருடம் கழிந்தது. அப்போது வைரவன் பழனியை அழைத்து ''நீ வாங்கிய கடன் வட்டியோடு சேர்த்து இப்போது ஐநூறு வராகன்கள் ஆகிவிட்டது. அதைக் கொடுக்கும் வரை உன் பூந்தோட்டத்தில் நீ அடி எடுத்து வைக்கக் கூடாது. இனி அது என்னுடையது. வேண்டு

—சிவனூர் செல்வன்—




மானல் தோட்டக்காரரர்களாக நீயும் உன் மகனும் வேலை செய்து கடனை அடைக்க வழிபார்" என்ருன்.

பழனியும் அவ்வாறே செய்வதாகக் கூறி பரமனையும் கூட்டிக் கொண்டு வைரவனின் வேலைகளை எல்லாம் செய்யலானுன்.

மேலும் ஒரு வருடம் கழிந்தது. பரமன் மனதில் "எவ்வளவு நாட்களுக்குத்தான் இப்படி வேலை செய்வது? வனதேவதை கருணைக் கடல் என்று அம்மா சொன்னுளே. அவளிடம் போய் முறையிட்டுப் பார்க்கிறேன். எதாவது வழிபிறக்கும்" என நினைத்து ஒரு நாளிரவு ஓடிக் காட்டிற்குள் சென்ருன்.

அது கோடை கால ஆரம்பம். அவன் ஒரு குளக்கரையை அடைந்தான். அதைச் சுற்றி இருந்த செடிகள் வாடி இருப்பதைக் கண்டு அவன் அவற்றிற்கு நீர் பாய்ச்சினுன்.

இதைக் கண்ட வனதேவதை மகிழ்ந்து போனுள். அதனுல் அவள் பரமனின் முன்தோன்றி "பரமா! உன் இந்தச் செயல் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கிறது. உனக்கு என்ன வேண்டும்? கேள். அதைக் கொடுக்கிறேன்" என்ருள்.

பரமனும் வட்டிக்கடை வைரவனைப் பற்றிக் கூறித் தன் தந்தையும் தானும் அவனுக்கு அடிமை போல உழைக்க வேண்டிய நிலை வந்தது பற்றி விவரமாகக் கூறினுன். அப்போது வனதேவதை அவனுக்கு ஆறுதல் கூறி ஒரு மரத்தில் தங்கம் போல மின்னும் ஒரு காயைக் காட்டி "அந்தக் காய் உன் கண்களுக்குத் தென்படுவது என் அருளினுல்தான். நீ அதனைச் சாப்பிட்டால் யார் கண்களுக்கும் தென்பட மாட்டாய். இதனை உபயோகித்து உன் பிரச்னைக்கு நீ முடிவு காணலாம். ஆனுல் ஒரு நிபந்தனை. உன் பிரச்னை தீர்ந்ததும் நீ வேறு எதுவும் செய்யாமல் நேராக என்னிடம் வர வேண்டும். அப்போது உன் பழைய உருவை நான் உனக்கு அளிப்பேன்" என்று கூறியது.

பரமனும் வனதேவதையை வணங்கி அந்தக் காயைப் பறித்துத் தின்ருன். பிறகு அவன் அங்

கிருந்து தன் ஊருக்குச் சென்றான். இதற்குள் பரமன் ஓடிப் போய் விட்டதற்காக வைரவன் பழனியைப் பிடித்து ஒரு மரத்தில் கட்டி அவனைச் சவுக்கால் அடித்துக் கொண்டிருந் தான். இந்த சமயத்தில்தான் பரமன் அங்கு போய்ச் சேர்ந்தான்.

இந்தக் கொடிய காட்சியைக் கண்ட பரமன் கோபம் கொண்டு வைரவனின் இடுப்பில் ஒரு உதை விட்டான். வைரவன் சுருண்டு கீழே விழுந்தான். தன்னை உதைத் தது யார் என்று அவனுக்குத் தெரிய வில்லை. இதற்குள் மற்றொரு அதி சயம் நடந்தது. வைரவன் வைத் திருந்த சவுக்கு உயரக் கிளம்பி அவனையே 'பட்பட்'டென்று அடித் தது. திடீரென அவன் இடுப்பி லிருந்த சாவிக்கொத்தும் உயரக் கிளம்பி வந்தது. இவை எல்லாம் பரமனின் செயல்களே.

பரமன் சாவிக்கொத்தோடு வைரவனின் வீட்டிற்குள் சென்றான். வைரவனின் இரும்புப் பெட் டியைத் திறந்து அதிலிருந்த கடன் பத்திரங்களை எல்லாம் தீயிட்டுக் கொளுத்தினான். கடன் பத்திரங்கள் எரிந்தது கண்டு வைரவன் பைத் தியம் பிடித்தவன் போல அலறி னான். ஊராரோ அவன் தங்களிடம் அநியாய வட்டிக்கு எழுதி வாங்கிய பத்திரங்கள் ஒழிந்தனவே என்று மகிழ்ந்தார்கள்.

பரமன் தன் பிரச்னை தீர்ந்தது



என நினைத்து வனதேவதையைக் காணத் திரும்பிக் காட்டிற்குச் செல்லலானான். அப்போது இருட்டி விட்டதால் அவன் ஒரு வீட்டுத் திண்ணையைப் பயன்படுத்தி அன் றைய இரவுப் பொழுதைக் கழிக் கத் தீர்மானித்தான். அப்போது அந்த வீட்டிலிருந்த கிழ தம்பதி கள் "ஐயோ! மகள் கல்யாணத் திற்காக வைத்திருந்த ஆயிரம் வராகனைக் கொள்ளைக்காரக் கட்டையன் எடுத்துக் கொண்டு போய்விட்டானே" என்று கூறிக் கதறிக் கொண்டிருந்தார்கள். அவர் களது நிலைகண்டு என்ன ஆனாலும் சரி அவர்களுக்கு உதவுவது என்று பரமன் தீர்மானித்துக் கொண்டான்.

அவன் அந்தத் திண்ணையி



லிருந்து இறங்கி தெருவில் சென்ற போது ஒரு வீட்டில் இருவர் கன்னம் வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். உடனே அவன் "யாரடா அது? இது நீங்கள் செய்யும் இரண்டாவது திருட்டா?" என்று அதட்டினான்.

அதைக் கேட்டதும் அந்த இரண்டு திருடர்களும் பயந்து எழுந்து தலை தெறிக்க ஓடினார்கள். பரமனும் 'பிடி பிடி' எனக் கத்திக் கொண்டு அவர்களைப் பின்தொடரவே அவர்கள் ஓடிவிடியும் வேளைக்கு கட்டையன் இருக்கும் குகையை அடைந்தார்கள். அவர்கள் குளிக்க அருகிலிருந்த ஒருநீர் வீழ்ச்சிக்குச் சென்றதும் பரமன் குகைக்குள் போய் கொள்ளைக்காரன் கொள்ளை அடித்தவற்றை எல்லாம் எடுத்து ஒரு மூட்டையாகக் கட்டினான். கிழ தம்பதிகளிடமிருந்து அவனது ஆட்கள் திருடிய ஆயிரம் வராகன்களை ஒரு சிறு மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பினான். அவன் கிழவனின் வீட்டிற்குப் போய் சிறுபையை சன்னல் வழியாக வீட்டினுள் போட்டுவிட்டு நேராக அந்நாட்டு மன்னனின் தர்பாருக்குச் சென்றான்.

அவன் தான் கொண்டு வந்த பெரிய மூட்டையை மன்னனின் காலடியில் போடவே மன்னன் திடுக்கிட்டான். ஏனெனில் அந்த மூட்டையைப் போட்டது யார் என்று தெரியவில்லை. அந்த மூட்டையை அவிழ்த்துப் பார்த்த போது அதில் ஏராளமான நகைகளும் வைரங்களும் முத்துக்களும் இருந்தது கண்டு அவன் திகைத்துப் போனான். அப்போது பரமன் "அரசே! இவை கொள்ளைக்காரக் கட்டைய்யன் கொள்ளை அடித்துச் சேர்த்து வைத்தவை. இவற்றை இவற்றின் சொந்தக்காரர்களுக்குக் கொடுத்து விடுங்கள். அவன் இருப்பது தலைநகருக்குத் தெற்கே உள்ள காட்டில். அவனது குகைக்குப் பக்கத்தில் ஒரு நீர்வீழ்ச்சி இருக்கிறது" என்று கூறிவிட்டு வனதேவதையைக் காணக் காட்டிற்குச் சென்றான்.

அவன் வனதேவதை வசிக்கும் இடத்தில் நின்று "தாயே! வன தேவதையே! நான் இங்கு வந்து சேரச் சற்றுத் தாமதமாகி விட்டது. என்னை மன்னித்து விடு" என்று வேண்டினான். அப்போது வனதேவதையின் குரல் கோபமாக "நீ என் நிபந்தனைப்படி நடக்கவில்லை. எனவே உனக்கு உன் பழைய உருவத்தைக் கொடுக்க மாட்டேன்" என்றது.

அது கேட்டு பரமனும் "தாயே! நீ எந்த தண்டனை கொடுத்தாலும் அதனை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன். என் கவலை எல்லாம் என் கிழத் தந்தையைப் பற்றித்தான் இருந்தது. அது இப்போது போய்விட்டதால் என்னைப் பற்றி நான் கவலைப்படவில்லை. அவர் சுகமாக வாழ நீ அருள் புரிந்தால் அதுவே போதும்" என்றான்.

அப்போது வனதேவதை அவன் முன் தோன்றி "பரமா! உன்னைப் பரீட்சிக்கவே அவ்வாறு கூறினேன். உன்னிடம் சுயநலம் இல்லை. பிறருக்கு உதவும் மனப்பான்மை உள்ளது. அதனால் உனக்கு உன் பழைய உருவம் கிடைக்கச் செய்கிறேன்" எனக்கூறி அவனை ஆசீர்வதித்தது.

பரமனுக்குப் பழைய உருவம் கிடைத்தது. அவன் எல்லோர் கண்களுக்கும் தெரியும்படி ஆகிவிட்டான். அவன் வனதேவதையை வணங்கி விடைபெற்றுக் கொண்டு தன் ஊருக்கு வந்து சேர்ந்தான். அவனது தந்தையும் தன் மகன் திரும்பி வந்தது கண்டு மகிழ்ந்து போனான். அதன்பின் அவர்களது பூந்தோட்டத்தில் தங்க ரோஜா மலர்கள் பூத்தன.

அவன் அந்த மலர்களை நல்ல விலைக்கு விற்றான். அந்த அதிசய மலர்களுக்கு நல்ல கிராக்கி இருந்தது. இதனால் அவன் பணக்காரன் ஆனதோடு ஏழை எளியவர்களுக்கு உதவி பேரும் புகழும் பெற்றான்.



# தொழில் இரகசியம்

புகளூரைச் சேர்ந்த புண்ணியகோடி தன் குடும்பத்தோடு காந்தமலைக்குப் போய் அங்குள்ள முருகனை தரிசித்து வரவிரும்பினார். காந்த மலைக்குச் செல்வ தானால் வழியிலுள்ள ஆற்றைக் கடந்து சென்றாக வேண்டும்.

அவர் தம் மனைவியுடனும் மகனுடனும் ஆற்றின் கரையை அடைந்தார். படகோட்டியிடம் "அக்கரைக்குப் போக எவ்வளவு கேட்கிறாய்?" என்று கேட்க அவனும் "ஒரு ஆளுக்கு ஒரு ரூபாய்தான்" என்றான். புண்ணிய கோடியும் "இவ்வளவுதானா!" என்று கூறி விட்டு மூன்று ரூபாய்களைக் கொடுத்து விட்டு தம் குடும்பத்தவரோடு படகில் சென்று மறு கரையை அடைந்தார்.

காந்திமலையில் தங்க வசதியோ உண்ண உணவோ கிடைக்காது. அதனால் அங்கே செல்பவர்கள் மாலைக்குள் திரும்பி எதிர்க் கரையை அடைந்து விட வேண்டும். எனவே புண்ணியகோடியும் கடவுள் தரிசனத்தை முடித்துக் கொண்டு ஆற்றின் கரைக்கு வந்தார். காலையில் அவரைக் கொண்டு வந்து விட்ட படகோட்டியே அங்கு இருந்தான்.

அவர்தம் மனைவியுடனும் மகனுடனும் படகில் ஏறப்போகையில் படகோட்டி "சாமி! இங்கிருந்து திரும்பிப் போக ஒருவருக்கு ஐந்து ரூபாய்" என்றான். அது கேட்டு புண்ணியகோடி "என்னப்பா இது! காலையில் வரும் போது ஒரு ரூபாய் வீதம்தானே வாங்கிக் கொண்டாய். இப்போது அதிகம் கேட்கிறாயே" என்று கேட்டார்

அவனும் "ஆமாம் இதுதான் என் தொழிலின் இரகசியம். நீங்கள் இதைக் கொடுத்தால்தான் மறுகரையை அடைய முடியும்" என்றான்.






**2**

[இமயமலையில் வாழ்ந்த சதானந்தர் என்ற முனிவர் தன் யோக சக்தியால் வினோதன் என்ற விசித்திரக் குள்ளனை உருவாக்கினார். வெகுதொலைவிலிருந்து கூக்குரலிடும் சத்தம் கேட்டு அவன் வெகு வேகமாக அங்கு சென்றான். ஒரு ஊரே தீயிடப்பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு அவன் யானைகளை ஏவி ஏழைகளின் குடிசைகள் எரிந்து போவதிலிருந்து தடுத்தான். அதன் பிறகு—]

யானைகள் ஜமீன்தாரரின் அடியாட்களைத் துரத்த அவர்கள் பயந்து மேடு பள்ளம் எனப்பாராமல் அலறி அடித்துக் கொண்டு ஓடினார்கள். யானைகள் அவர்களை அக்கிராமத்திலிருந்து விரட்டிய பின் வினோதனின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து காட்டிற்குள் சென்று விட்டன.

வினோதன் பூவுலகிற்குப் புதியவனே. சதானந்த முனிவர் தம் தவச்சக்தி முழுவதையும் உபயோகித்து அந்த அற்புத மனிதனை உருவாக்கி இருந்தார். அதனால் அவன் உலகின் ஜீவராசிகளைத் தன்னிச்சைப்படி நடக்க வைக்கும் சக்தியைப் பெற்றிருந்தான். அந்த அற்புத சக்தியைக் கொண்டுதான் ஒரு நொடியில் யானைகளை வரவழைத்து ஏழை



மக்களின் வீடுகள் எரிந்து போகாதபடிக் காப்பாற்றினுன்.

அதன் பிறகு அவன், இயற்கையின் பல படைப்புகளைக் கண்டு ரசித்தவாறே செல்லலானுன். சூரியன் மறையும் வேளைக்கு தீடீரென ஒரு பெண் கதறிக் கூக்குரலிடுவது அவன் காதில் விழுந்தது.

அதைக்கேட்டு திடுக்கிட்ட விஞேதன் அக்குரல் எழுந்த அத்திசை நோக்கிச் சென்றுன். சற்று நேரத்தில் அவனது உருவம் காற்ருேடு கலந்து யார் கண்களுக்கும் தென்படாதது போல ஆயிற்று. அவன் அக்குரல் ஒலித்த இடத்தை அடைந்தான். அது ஒரு கிராம எல்லையிலுள்ள ஒரு குடிசை.

''ஐயோ! என் மகனை விட்டு விடுங்கள். உங்களுக்கு என் வீட்டிலுள்ள பணம், நகை எல்லாமே கொடுத்து விடுகிறேன்'' என்று ஒரு பெண்மணி அழுதவாறே கூறிக் கொண்டிருந்தாள். விஞேதன் அக்குடிசைக்குள் எட்டிப் பார்த்தான். மூன்று முரடர்கள் கைகளில் கத்தியும், சவுக்கும், தடியும் வைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார்கள். அந்தப்பெண் அவர்களது கால்களைப் பிடித்துக் கெஞ்சிக் கொண்டிருந்தாள்.

அம்மூவரில் ஒருவன் பதினான்கு வயதுச் சிறுவன் ஒருவனைப் பிடித்து வைத்துக் கொண்டிருந்தான். அவர்களது தலைவன் போலத் தென்பட்டவன் அவளிடம் ''உன் பணமும் நகையும் யாருக்கு வேண்டும்? உனக்கு வேண்டுமானுல் நான் கொடுக்கிறேன். எனக்கு வேண்டியது இந்தச் சிறுவனே. அங்கம் எதுவும் குறைவில்லாமல் அழகாக இருக்கும் இவனை நான் எங்கள் தேவிக்குப் பலியிடப் போகிறேன். இப்படிப்பட்டவன் கிடைப்பானு என்று நாங்கள் எவ்வளவு சிரமப்பட்டுத் தேடினேம்! இப்போது கிடைத்து விட்டான். இவனை விட்டு விடுவோமா?'' என்றுன் அட்டகாசமாகச் சிரித்தவாறே.



உங்களை அந்த தேவிதான் தக்க படி உன்னை தண்டிக்க வேண்டும்'' என்று சபிக்கலானுள். ஜக்குவோ ஏளனச் சிரிப்பு சிரித்தவாறே "நன்ருகச் சபி. என்னை உன் சாபம் ஒன்றும் செய்யாது. எனக்கு தேவியின் அருள் கிடைக்கப்போகி றது.'' என்று கூறினுன்.

அந்தப் பெண்ணின் கூக் குரலைக் கேட்டுச் சிலர் ஓடிவந் தாலும் ஜக்குவும் அவனது இரு ஆட்களும் கத்தியும் தடியுமாக நின்றிருப்பது கண்டு மலைத்துப் போனுர்கள். மூவரும் அந்தச் சிறுவனை இழுத்துக் கொண்டு காட்டை நோக்கிச் சென்ருர் கள். அவர்களைத் தொடர்ந்து விநோதனும் சென்ருன்.

அவர்கள் வெகுதூரம் போய் உயரமான மலைப்பகுதியை அடைந் தார்கள். அங்கு பல குகைகள் இருந்தன. ஒரு பெரிய குகை முன் பத்து முரடர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் யாவரும் ஜக்குவின் தலைமை யில் இயங்கும் கொள்ளைக்காரர் களே. அவர்களைப் பார்த்து ஜக்கு "பூஜைக்கு வேண்டிய சாமான் களை எல்லாம் சேகரித்து விட்டீர் களா?'' என்று கேட்டான்.

அவர்களும் "ஓ! தயாராக வைத்திருக்கிருேம். பூசாரி பைர வர் நள்ளிரவில்தான் நல்ல முகூர்த்த வேளை வருகிறது என்று

அவளோ "ஐயோ! என் மகனைப் பலியிடக் கொண்டுபோகி ருர்களே! யாராவது வந்து காப் பாற்றுங்களேன்'' என்று கத்தி ஞள். அந்த முரடர் தலைவனே "இந்தக் கொள்ளைக்கார ஜக் குவை யாரால் எதிர்க்க முடி யும்? வீணுகக் கூச்சல் போடாதே. யார் வந்தாலும் ஒரே குத்தில் கொன்று விடுவேன். தெரி யுமா?'' என்று நீண்ட கத்தியைக் காட்டி மிரட்டினுன்.

அவளோ "அடே அநியா யக்காரர்களா! என் கணவன் வீட்டில் இல்லாத போது, என் ஞல் எதுவும் செய்ய முடியாது என்று கண்டு என் அருமை மகனைக் கடத்திப் போகிறீர்களே

கூறினர்'' என்றார்கள். ஜக்குவும் ''ரொம்ப சரி. பலி கொடுக்கப் பையனையும் கொண்டுவந்து விட்டேன். அசட்டையாக இருந்து விடாதீர்கள். அவனது கை, கால்களைக் கட்டிப்போட்டு ஒரு குகையில் அடைத்து வையுங்கள். பூசாரி சொல்லும் போது அவனை பலிபீடத்திற்கு அழைத்துப் போகலாம்'' என்றான்.

இதற்குள் ஒரு கொள்ளைக்காரன் குகைக்குள் போய் ஒரு பாத்திரத்தில் நீரை எடுத்து அதில் பச்சைநிறத் திரவத்தில் இரண்டு சொட்டுகளை விட்டு எடுத்து வந்தான். அந்தப் பானத்தை அச்சிறுவனின் வாயில் பலவந்தமாக ஊற்றினான். இதையெல்லாம் வினோதன் கவனித்தான்.

ஜக்குவும் ''இதைக் குடித்தபின் இவன் மயக்கமடைந்து விழுந்து விடுவான். அப்போது இவனது கை கால்களைக் கட்டிவிடுங்கள். சுய நினைவில் இல்லையே என்ற அலட்சியப்படுத்தாதீர்கள்'' என்றான். அவர்களும் மறுபேச்சுப் பேசாமல் அச்சிறுவனின் கைகால்களைக் கட்டி ஜக்கு கூறிய இடத்தில் அவனை மூட்டைபோல வைத்தார்கள்.

வினோதன் மறைந்திருந்து அவர்களது செயல்களை எல்லாம் கவனித்துக் கொண்டிருந்தான். அவன் இருந்த இடம் ஒரு புதர். அவன் சற்றுத் திரும்பியபோது



அங்கு 'சர்சர்' என்ற சத்தம் ஏற்பட்டது. அதைக் கேட்ட ஜக்கு ''என்னடா அது சத்தம்'' என்று கேட்டான்.

ஒரு கொள்ளைக்காரனும் ''ஏதோ ஒரு முயல் புதரில் ஓடுகிறது'' என்றான். அதைக் கேட்ட ஜக்கு ''முயல்தானே. விடு கவலையை. சரி. ஆகவேண்டியதைக் கவனியுங்கள்'' என்றான். கொள்ளைக்காரர்கள் நள்ளிரவில் நடக்கப்போகும் பூசைக்கான ஏற்பாடுகளைச் செய்வதில் முனைந்தனர்.

வினோதன் அங்குமிங்கும் சென்று என்னவெல்லாம் நடக்கிறது என்று பார்க்கலானான். முடிவில் அந்தச் சிறுவன் கட்டிப்



தீர்மானித்துக் கொண்டான்.

அப்போது ஓரிடத்தில் யாரோ பலமாகச் சிரிக்கும் சத்தத்தை அவன் கேட்டான். விஜேதன் குகையிலிருந்து வெளியே வந்து அந்த இடத்திற்கு சென்றான். அங்கு ஒரு பெரிய புலியின் உருவம் வைக்கப்பட்டிருந்தது. அதன் முன் கொள்ளைக்காரர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அந்தப் புலி விக்கிரகம்தான் அவர்கள் வழிபட்டுவரும் தேவி. அதைக்கண்டு விஜேதன் ஆச்சரியப்பட்டான்.

அப்போது ஒரு கொள்ளைக்காரன் "பைரவா! நீயோ பூசாரி! நீ இப்போது எங்களோடு சேர்ந்து மது அருந்தினால் பூஜை வேளையில் உன் கைகள் நடுங்குமே. அப்போது ஒரே வெட்டில் அந்தச் சிறுவனின் தலையை வெட்டி தேவிக்கு எப்படி பலி கொடுப்பாய்? அப்படி நீ வெட்டா விட்டால் நம் தலைவர் உன் தலையை ஒரே வெட்டாக வெட்டித் தூக்கி எறிந்து விடுவாரே" என்றான்.

ஜக்குவும் "ஆமாம் பைரவா! தவறு செய்பவன் யாராக இருந்தாலும் என் தண்டனையிலிருந்து தப்ப முடியாது. அவனை மன்னிக்கவும் மாட்டேன்." எனவே பூசாரி பைரவனும் "நான் என் வேலையை ஒழுங்காகக் கவனிக்கிறேன்" என்று கூறி எழுந்து

போட்டிருந்த குகைக்குள் அவன் நுழைந்தான். கட்டி உருட்டப்பட்டிருக்கும் அச்சிறுவனை எப்படித் தப்பிக்க வைப்பது என்று அவன் யோசிக்கலானான். அவனைச் சுமந்து செல்வது சிரமமே. ஏனெனில் அச்சிறுவன் விஜேதனை விட உருவத்தில் பெரியவன். அவனைத் தூக்கிக் கொண்டு வேகமாக ஓடமுடியுமா என்று அவன் யோசித்துப் பார்த்தான். அப்படி அவனைத் தூக்கிச் செல்லும் போது கொள்ளைக்காரர்கள் கண்டுவிட்டால் ஆபத்தில் அல்லவா போய் முடியும்? எனவே சிறுவனைத் தப்பவைக்க வேறு ஏதாவது ஒரு வழி தான் செய்ய வேண்டும் என்று அவன்

பூசைக்கான பொருள்களை எடுத்துச் சரி பார்க்கலானான்.

அப்போது விநோதனுக்கு ஒரு யோசனை தோன்றியது. உடனே அவன் சிறுவனுக்கு மயக்கம் வர கொடுத்த பச்சை திரவம் வைக்கப் பட்டிருந்த குகைக்குச் சென்றான். அங்கு ஒரு சிறுபாத்திரத்தில் அத் திரவத்தை விட்டு நிரப்பி எடுத்துக் கொண்டு வந்து அதனைக் கொள்ளைக்காரர்கள் குடிக்கும் மதுவில் கலந்து விட்டான். கொள்ளைக் காரர்கள் அந்த மதுவை இரண்டு தடவை குடித்தார்கள். சில நொடிகளில் அவர்கள் எல்லோருமே தம் நினைவை இழந்து மயக்கமுற்று கீழே விழுந்து விட்டார்கள். பூசாரி பைரவன் இதை கவனிக்கவில்லை. அவன் தன் வேலைகளை செய்து பூசைக்குத் தயாராகி "நல்ல நேரம் வந்து விட்டது. போய் அந்தச் சிறுவனை அழைத்து வாருங்கள்" என்று கூறிச் சுற்றிலும் பார்த்தான்.

எல்லோரும் கீழே படுத்திருப்பது கண்டு அவன் "என்ன இது? எல்லோருமா தூங்குகிறீர்கள்?" என்று கேட்டான். யாரிடமிருந்தும் எவ்வித பதிலும் வரவில்லை. விநோதன் உடனே அந்தச் சிறுவன் கிடந்த குகைக்குள் சென்றான். அப்போதுதான் அச் சிறுவனும் மயக்கம் தெளிந்து கண்களைத் திறந்து பார்த்தான்.



விநோதன் அவனது கை கால் கட்டுகளை அறுத்துவிட்டான். அதைக்கண்ட அச்சிறுவன் ஆச்சரியப்பட்டான். அவன் விநோதனைப் பார்த்து ஏதோ கேட்க முயன்றான். ஆனால் விநோதன் அவனைப் பேசவிடாமல் "இப்போது எதுவும் கேட்காதே. நாம் இந்த நொடியிலேயே இங்கிருந்து தப்பிப்போய்விட வேண்டும். பேசாமல் என்பின்னால் வா" என்றான்.

சிறுவனும் விநோதன் கூறியபடியே நடந்தான். இருவரும் வேக வேகமாகச் சென்றனர். இரவு முழுவதும் நடந்து விடியும்போது அவர்கள் மலைப்பகுதியிலிருந்து வெளிவந்து ஒரு கிராமத்தை

அடைந்தார்கள். அப்போது அந் நாட்டு மன்னனின் சில படைவீரர் கள் அணிவகுத்துப் போய்க் கொண்டிருந்தார்கள்.

அந்த கிராமத்து மக்கள் அந்த வீரர்களிடம் கொள்ளைக்காரர் கள் புரியும் கொள்ளைகள் பற்றிக் கூறி அவர்களைப் பிடித்துத் தங் கள் பயத்தைப் போக்குமாறு அவ் வீரர்களிடம் வேண்டிக் கொண்டி ருந்தார்கள்.

அதைச் சற்று தூரத்திலிருந்து பார்த்த விஞேதன் தன்னேடு வந்த சிறுவனிடம் "நீ போய் அந்த வீரர்களிடம் கொள்ளைக் காரர்களின் இடத்தைப் பற்றிக் கூறு. அவர்கள் இன்று மத்தியானம் வரை மயங்கி விழுந்தே கிடப்பார் கள். அதனுல் அவர்களை எல்லாம் மிக எளிதில் சிறைப்படுத்தி விட லாம்" என்ருன்.

அச்சிறுவனும் "நீங்கள் எனக் கும் நாட்டு மக்களுக்கும் நன்மை புரிகிறீர்களே. உங்களுக்கு எப் படி நன்றி செலுத்துவது என்று தான் தெரியவில்லை" என்று கூறி வணங்கினுன்.

அப்போது விஞேதன் "தம்பீ! நீ இன்று உயிர்தப்ப முடிந்தது என்ருல் உலகம் உன்னிடமிருந்து ஏதோ ஒரு பணியை எதிர்பார்க் கிறது என்றே பொருள். உனக்கு என் உதவி வேண்டுமானுல் 'விஞேதா' என்று மூன்று முறை என்பெயரைச் சொல்லிக் கூப்பிடு. நான் உன் உதவிக்கு வருகிறேன். உன் பெயர் என்ன சொன் னுய்? சுகுமாரன்தானே" என்று கேட்டான்.

அச்சிறுவனும் "ஆமாம் அது தான் என்பெயர். நீங்கள் கூறிய படியே செய்கிறேன்" எனவே விஞேதனும் அங்கிருந்து வேகமா கக் கிளம்பிச் சென்ருன்.

[தொடரும்]





# அழகிலே வேண்டும்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே. நீ இப்படி விடாப்பிடியாக இச்செயலை செய்ய முயல்வது கண்டு பரிதாபப்படுகிறேன். உனக்கு சிரமம் தோன்றாதிருக்க ஒரு கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

மங்களகிரியை மார்க்கசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது மனைவி இரட்டைக் குழந்தைகளைப் பெற்று விட்டு இறந்து போனாள். மன்னன் அவர்களுக்கு வீரசேனன், சூரசேனன்

# வேதாளம் சொல்லும் கதை



என்று பெயர் வைத்து தக்க முறையில் வளர்த்து வந்தான். அவர்களுக்கு எல்லாக்கலையும் கற்பிக்க ஏற்பாடு செய்தான். வீரசேனன் சூரசேனன் பிறப்பதற்குச் சில நொடிகளுக்கு முன் பிறந்தவன். எனவே அவனை மன்னன் மூத்தவனுகக் கருதி அவனுக்குப் பட்டம் கட்டவும் தீர்மானித்திருந்தான்.

தன் இரு மகன்களும் விவாக வயதை அடைந்து விட்டதால் அவர்களுக்கு விவாகம் செய்து வைத்து மூத்தவனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட்டுத்தான் கானகம் போய் நிம்மதியாகக் காலம் கழிக்கப் போவதாக அவன் தன் இரு மகன்களிடமும் கூறினுன்.

பிறகு அவன் "நான் இப்போதே பலநாட்டு அரச குமாரிகளின் உருவப் படங்களை வரவழைக்கிறேன். நீங்கள் தேர்ந்தெடுக்கும் பெண்களை உங்களுக்கு மணம் செய்து வைத்து விடுகிறேன்" என்றுன்.

அதைக்கேட்ட வீரசேனன் "தந்தையே! என்னை மன்னித்து விடுங்கள். நான் எந்த அரசகுமாரியையும் தேர்ந்தெடுத்து மணம் செய்து கொள்ளப்போவதில்லை. ஏனென்றுல் நான் நம் ஆஸ்தான சிற்பியின் மகளையே மணக்க விரும்புகிறேன். வேறு எந்தப் பெண்ணையும் மணக்க மாட்டேன்" என்றுன்.

அதைக்கேட்ட மார்க்கசேனன் திடுக்கிட்டான். வீரசேனனின் பிடிவாதத்தை மாற்ற முடியாது என்பது அவனுக்கு நன்கு தெரியும். அதனுல் அவன் சூரசேனனைப் பார்த்து "நீ என்ன சொல்லப் போகிருய்?" என்று கேட்டான். அவனும் "நாளைக்கு என் எண்ணத்தைக் கூறுகிறேன்" என்றுன்.

மறுநாள் அவன் தன் தந்தையிடம் "நான் மிக மிக அழகாக உள்ள அரசகுமாரிகளில் ஒருத்தியைத் தேர்ந்தெடுத்து மணந்து கொள்ள விரும்புகிறேன். எனவே தாங்கள் எல்லா அரசகுமாரிகளின் படங்களை வரவழைக்காமல் மிக அழகாக உள்ள அரசகுமாரிகளின் உருவப் படங்களை மட்டும் வரவழையுங்கள். நான் அவர்களில் ஒருத்

தியைத் தேர்ந்தெடுத்து மணந்து கொள்கிறேன்'' என்ருன்.

ஒரு சில நாட்களில் மார்க்க சேனன் சில அழகிய அரசகுமாரி களின் உருவப் படங்களை வரவழைத்து விட்டான். சூரசேனனும் அவற் றைப் பார்த்துவிட்டு முடிவில் புவனகிரி, உதயகிரி, சந்திரிகிரி ஆகிய மூன்று நாடுகளின் அரச குமாரிகளின் படங்களைத் தனி யாக எடுத்து வைத்து ''தந்தையே! நான் இந்த மூன்று அரசகுமாரிகளை யும் நேரில் கண்டு பேசிவிட்டு முடிவில் இவர்களில் ஒருத்தியைத் தேர்ந்தெடுத்து மணந்து கொள் கிறேன்'' என்ருன்.

மார்க்கசேனனும் ''சரி. உன் னிஷ்டப்படியே செய். நீ புறப் பட்டு வருவதாக அந்த மன்னர்களுக் கும் தகவல் அனுப்புகிறேன். நீ புறப்படவும் ஏற்பாடுகளைச் செய் கிறேன்'' என்ருன். சூரசேனனும் மறுநாள் கிளம்பி முதலில் புவன கிரியை அடைந்தான்.

புவனகிரி மன்னனும் தானே வந்து சூரசேனனை வரவேற்றுத் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்ருன். அவனுக்கு எல்லா உப சாரங்களையும் செய்தபின் தன் மகளை அழைத்துவருமாறு அவன் பணிப்பெண்களுக்குக் கட்டளை இட்டான்.

சற்று நேரத்திற்குப் பின் அந்தப் பெண்கள் திரும்பி வந்து ''அரசே!



மன்னிக்க வேண்டும். இளவரசி யார் தூங்கிக் கொண்டிருக்கிருர் கள். நேற்றிரவு மயிலிறகு விசிறி யால் வீசிக் கொண்டிருக்கையில் ஒரு மயிலிறகு பஞ்சணையில் விழுந்து விட்டது. இளவரசியார் அதைப் பார்க்கவில்லை. அது அவ ரைக் குத்தியதால் இரவு முழுவதும் அவர் உடல் வலித்தது. அதனுல் அவர் தூங்கவில்லை. இப்போது தான் தூங்குகிருர். எனவே அவரை அரசகுமாரர் மாலையில் சந்திக்க லாம் என்று மகாராணியார் சொல்லச் சொன்னுர்'' என்ருர் கள்.

சூரசேனன் அன்று மாலையில் புவனகிரி அரசகுமாரியைச் சந்தித் தான். அவளோடு அவன் மட்டுமே

பூங்காவில் இருந்தான். அப்போது அவன் "உங்கள் திருமணம் தீர் மானிக்கப்பட்டால் நீங்கள் எனக் குப் பிரியமான நீலநிறத்தில் புடவை கட்டிக் கொள்வீர்களா?" என்று கேட்டான். அவளும் "இல்லை. எனக்குப் பிடித்தமான சிவப்பு நிறப் புடவையையே கட் டிக் கொள்வேன்" என்றாள்.

"விவாகம் ஆனதும் நீங்கள் முதலில் என் தந்தையின் கால் களில் விழுந்து வணங்குவீர்களா அல்லது உங்கள் தந்தையின் கால் களிலா?" என்று அவன் கேட்கவே அவளும் "முதலில் என் தந்தை யின் கால்களில்தான்" என்றாள். அடுத்து அவன் "சரி, விருந்தில் நீங்கள் எனக்குப் பிரியமான பாய சத்தைக் குடிப்பீர்களா அல்லது உங்களுக்குப் பிடித்த இனிப்பைச் சாப்பிடுவீர்களா?" என்று கேட் கவே அவளும் "எனக்குப் பிடித்த இனிப்பைத்தான் சாப்பிடுவேன்" என்றாள்.

இதன் பிறகு சூரசேனன் புவன கிரியிலிருந்து கிளம்பி உதயகிரி அரசகுமாரியைக் காணச் சென் றான். உதயகிரி மன்னன் பெயரள வில்தான் மன்னன். உண்மையில் நிர்வாகம் அவனது ராணியின் கீழ்த்தான் இருந்தது. அவள்தான் சூரசேனனை வரவேற்றாள். அந்த வரவேற்பின் போது அரச குமாரி இல்லாதது கண்டு அவன் "உங் கள் மகளை வரச் சொல்கிறீர் களா?" என்று கேட்டான்.

உதயகிரி ராணியும் "என் மகள் தினமும் குளிக்கு முன்



பாலேடு எடுத்து உடலில் பூசிக் கொண்டு குளிப்பது வழக்கம். இன்றும் அவள் அதனைத் தன் முகத்தில் பூசிக் கொண்டபோது பாலேடு அவளது கன்னத்தில் குத்தி காயப் படுத்தி விட்டது. அதனால் குளித்து முடித்தபின் வைத்தியரை வரவழைத்துக் காட்டினேன். இப்போது வைத்தியர்களின் சிகிச்சையில் இருக்கிறாள்'' என்றாள்.

அன்று மாலை சூரசேனன் உதயகிரி அரசகுமாரியைச் சந்தித்த போது அவன் புவனகிரி அரசகுமாரியிடம் கேட்ட கேள்விகளையே அவளிடம் சொல்லி விடைகளைக் கேட்டான். அவளும் "உங்களுக்குப் பிடித்தமான நீல நிறப் புடவையைக் கட்டிக் கொள்வேன். நீங்கள் விரும்புகிற பாயசத்தைச் சாப்பிடுவேன். உங்கள் தந்தையின் கால்களில் முதலில் விழுந்து வணங்குவேன்'' என்றாள்.

சூரசேனன் உதயகிரியிலிருந்து கிளம்பி சந்திரகிரிக்குச் சென்றான். அவனை வரவேற்க மன்னனும் ராணியும் வந்திருந்தார்கள். அவனை அவர்கள் தம் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள். அவர்களாகவே "அரசகுமாரா! நீ சற்று இளைப்பாறு. இன்று மாலை நீ அரசகுமாரியைச் சந்திக்கலாம்'' என்று அவன் கேட்பதற்கு முன் கூறினார்கள்.

அப்போது சூரசேனன் "நீங்கள் நல்ல நேரம். சகுனம் என்றெல்லாம் பார்ப்பது உண்டா?'' என்று கேட்க ராணியும் "அதெல்லாம் இல்லை. இன்று காலை எங்





கள் மகள் கோவிலுக்குப் போய் விட்டுத் திரும்பிவந்து கொண்டிருந்த போது ஒரு பவளமல்லி மலர் அவள் தலைமீது விழுந்தது. அப் போதிருந்து அவள் தலைவலியால் கஷ்டப்பட்டுகிருள்'' என்ருள் கண் கலங்கியவாறே.

மாலையில் சூரசேனன் சந்திர கிரி அரசகுமாரியை அவளது அறை யில் சந்தித்தான். அவளிடமும் அவன் மற்ற அரசகுமாரிகளிடம் கேட்ட அதே மூன்று கேள்விகளைக் கேட்டான். அவளோ ''புடவை நிறத்தைப் பற்றிக் கவலைப்பட மாட்டேன். அது உடுக்க கனமானதா அல்லது இலேசானதா என்றே பார்ப்பேன். இனிப்பு எதைப் பரிமாறிஞலும் சாப்பிடுவேன். ஏனெனில் அவற்றை விருந்தின் போது தயாரிப்பது என் பொறுப் பில் இல்லையே. நான் எல்லோருக் கும் விழுந்து வணங்கிஞல் என் இடுப்பு ஒடிந்து விடலாம். எனவே தனித்தனியாக ஒவ்வொருவர் கால்களிலும் விழுந்து வணங்கா மல் எல்லோரையும் பார்த்துக் கை கூப்பி வணங்குவேன்'' என்ருள்.

சூரசேனன் சந்திரகிரியிலிருந்து புறப்பட்டுத் தன் ஊரை அடைந் தான். அவன் தன் தந்தையிடம் ''நான் சந்திரகிரி அரசகுமாரியை மணக்க விரும்புகிறேன். அவளே உலகின் எல்லோரையும் விட அழ கானவள்'' என்ருன்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! சாதாரணமாக எந்த இளைஞனும் தான் மணக்கப் போகும் பெண் அறிவாளியாயும் அடக்க ஒடுக்கமாய் இருப்பவளா யும் அழகாயும் இருக்க வேண்டும் என்றுதான் விரும்புவான. வீர சேனனும் அப்படிப்பட்ட இளைஞன் தானே. ஆஞல் அவன் தன் மனைவி மிகமிக அழகாக இருந்தாலே போதும் என ஏன் எண்ணிஞன்? இது நகைப் பிற்குரிய விஷயம்தானே. ஆஞல் சூரசேனன் இவ்வாறு ஒரு முடி வுக்கு வர வேறு ஏதாவது கார ணம் இருந்தாலும் இருக்கலாம். உனக்கு இது நன்கு தெரிந்திருந் தும் நீ அதனைக் கூருவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூருகி

விடும்'' என்றது.

விக்கிரமனும் ''இரட்டைக் குழந்தைகளான போதிலும் வீர சேனன் சூரசேனன் பிறப்பதற்கு ஒருசில நொடிகளுக்கு முன் பிறந்த தால் மன்னனின் மூத்த மகன் என்று கருதப்பட்டு சிம்மாசனத்தில் அமர உரிமை பெற்ருன். அரசனுகப் போகும் வீரசேனன் அரசியல் அறிவே இல்லாத ஒரு சாதாரண ஏழைக் குடும்பப் பெண்ணை மணக்க உறுதி கொண்டு விட்டான். அவள் ராணியாகும் போது சூரசேனனின் மனைவியாகும் அரச குடும்பப் பெண்ணிற்கு அவளை மட்டமான வள் என்ற எண்ணமே தோன்றும். அதனுல் சூழ்ச்சி பொருமை, போட்டி என்றெல்லாம் ஏற்படும். அவனது மனைவி பட்டத்து ராணி யாக முடியாவிட்டாலும் தான் பட்டத்து ராணியை விட ஏதோ ஒரு விதத்தில் உயர்ந்தவள் என்ற திருப்தி அவள் மனதில் குடிகொண் டிருக்க வேண்டும் என்று சூரசேனன் நினைத்தான். சாதாரணப் பவள மல்லிப்பூ தலைமீது விழுந்ததால் உதயகிரி அரச குமாரிக்குத் தலை வலி ஏற்பட்டது என்ருல் அவளால் கனமான தங்கக் கிரீடத்தைத் தலை யில் அணிய முடியாதே. இந்த பாரத்தைத் தாங்கமுடியாதவளால் ராஜ்ய பாரத்தைத் தாங்க முடியுமா என்ன? குடும்பத்தில் அமைதியும் நாட்டில் கலகமோ குழப்பமோ ஏற்படக் கூடாது என நினைத்தே சூரசேனன் அறிவுக்கு முதலிடம் கொடுக்காமல் மிகமிக அழகான பெண்ணைத் தேர்ந்தெடுத்தான். இதுதான் உண்மையான காரணம்'' என்று கூறினுன்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலைந்து விடவே, அவன் சுமந்துவந்த உட லோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# விநோத வைத்தியம்

அந்த ஊரில் வராகசாமி கைராசியான வைத்தியர். அவர் ஒரு வேளை மருந்து கொடுத்தாலே போதும், நோய் பறந்து விடும் என்று ஊரார் பேசிக் கொண்டார்கள்.

ஒரு நாள் அவ்வூர் லட்சாதிபதி இலட்சுமணன் அவரிடம் வந்து "காலை முதல் ஒரே வயிற்று வலி. பொறுக்க முடியவில்லை. மருந்து கொடுங்கள்" என்றார். வராகசாமியும் "காலையில் என்ன சாப்பிட்டீர்கள்?" என்று கேட்டார். இலட்சுமணனும் "தோசைதான். அது சரியாக வேகவில்லை போல இருந்தது" என்றார்.

அப்போது வராகசாமி "அப்படியா?" என்று கூறிவிட்டு இலட்சுமணனின் கண்களில் மருந்துத் துளிகளை விட்டார். இலட்சுமணனோ "என்ன வைத்தியரே! நான் வயிற்றில் வலி என்று சொல்கிறேன், கண்ணுக்கு மருந்து போடுகிறீரே" என்று கேட்டார்.

வைத்தியரும் "உங்கள் பார்வை சரியாக இல்லை. அதனால்தான் வேகாத தோசையைப் பார்க்காமல் சாப்பிட்டுவிட்டீர்கள். சரியாக இனிமேல் நீங்கள் எதையும் பார்க்க வேண்டும் என்பதற்காகத்தான் கண்ணுக்கு மருந்து போட்டேன்" என்றார்.



# மகான்கள் கனவு கண்ட பாரத நாடு

## இந்தியர்கள் நாம்!

பம்பாயில் பார்ஸிகளில் மிகவும் பிரமுகரானவர் தாதாபாய் நௌரோஜி. அவர் அவர்களுக்கு மட்டுமல்லாமல் இந்தியா முழுவதற்குமே தலைவராக விளங்கினர். லண்டனிலுள்ள காமென்ஸ் சபைக்கு இந்தியாவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட முதலாவது இந்தியர் நௌரோஜி. அவர் இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் தலைவராக முதலில் 1886லும் பிறகு 1893லும் மூன்றுவது முறையாக 1906லும் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1906ல் அவர் கல்கத்தாவில் தலைமை வகித்த காங்கிரஸ் மகாசபையில் தான் காங்கிரஸ் பூர்ண சுயராஜ்யம் தன் லட்சியம் என அறிவித்தது. 1893ல் லாகூரில் நடந்த காங்கிரஸ் மகாசபையில் தலைமை உரை ஆற்றுகையில் நௌரோஜி இவ்வாறு கூறினர்.

"நாம் அனைவரும் ஒரு தாய்மக்கள். நம் அன்னை இந்தியநாடு. இதனை நாம் எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும். நான் ஒரு இந்தியன் என்ற எண்ணத்தோடு தான் நான் என் நாட்டிற்கும் என் நாட்டு மக்களுக்கும் பணிபுரிந்து வருகிறேன். நாம் ஹிந்துக்களாகவோ, மூஸ்லீம்களாகவோ கிருஸ்துவர்களாகவோ அல்லது பார்ஸிகளாகவோ இருந்தாலும் கூட முதலில் நாம் இந்தியர்களே. நம்நாடு இந்தியநாடு, நாம் இந்தியர் என்ற உண்மையை மறக்கக் கூடாது".

## உங்களுக்குத் தெரியுமா?

1. உலகில் மிகப்பெரிதும், அதிகநிறையும் உள்ள பிராணி எது?
2. மிக உயரமான பிராணி எது?
3. இதுவரை மிக அதிக நிறை உள்ள மனிதர் யார்?
4. அவரது நிறை என்ன?
5. மிக அதிக நிறை உள்ள பெண்மணி யார்?
6. அவரது நிறை என்ன?

(விடைகள் 36ம் பக்கத்தில்)

# முருகன்



தாரகாசுரன் என்ற அரக்கன் பிரம்மாவிடமிருந்து அரிய வரங்கள் பெற்று தேவர்களையும் மானிடர்களை யும் மிகவும் துன்புறுத்திவந்தான். தேவர்கள் தேவந்திரனின் தலைமை யில் கைலாயத்திற்குச் சென்று பரம சிவனிடம் தாரகாசுரன் செய்யும் கொடுமைகளை கூறித் தம்மைக்காக்க வேண்டினர்கள்.

பரமசிவனும் தம் நெற்றிக் கண் ணைத்திறந்துதம் சக்தியை அக்கினி தேவன் வாயிலாக கங்கை நதியில் சேர்க்கச் செய்தார். கங்கை அதனைச் சரவணப்பொய்கையில் கொண்டு போய்ச் சேர்த்தது. அச்சக்தி அதில் ஒரு அழகிய குழந்தையாக மாறியது. அதைக் கண்ட ஆறு கார்த்திகைப் பெண்கள் அதனை எடுத்து வளர்த் தார்கள். அப்போது அக்குழந்தைக்கு ஆறுமுகங்களும் பனிரெண்டு கரங் களும் இருந்தன.

கார்த்திகைப் பெண்களால் வளர்க் கப்பட்டதால் அக்குழந்தைக்கு கார்த்திகேயன் என்ற பெயர் ஏற் பட்டது. ஆறுமுகங்களைக் கொண்டி ருந்ததால் ஆறுமுகம் (சண்முகன்) என்றும் பெயர் பெற்றது. தூய மணிபோல இருந்ததால் சுப்பிர மணியன் என்றும் அழகாக இருந் ததால் முருகன் என்றும் அழைக்கப்

பட்டது. கந்தன் குகன், சரவணன் என்றும் பெயர்களை அது பெற்றது.

முருகன் தன்தந்தை பரமசிவனுக்கே பிரணவ மந்திரத்தை உபதேசித்ததால் சுவாமிநாதன் என்றும் அழைக்கப்படுகிறான். அரக்கர்களை ஒழித்து தேவர்கள் படையின் அதிபதியாக அவன் இருந்ததால் தேவ சேனாபதி என அழைக்கப்பட்டான். முருகன் தாரகாசுரனைக் கொன்று தேவர்களையும் பூ உலகவாசிகளையும் நிம்மதியாக வாழ வைத்தான்.

முருகனை சிவனுக்கும் பார்வதிக்கும் பிறந்த இரண்டாவது மகனாகவும் அவனது அண்ணனாக விநாயகரையும் கருதி வழிபட்டு வருகிறார்கள்.

# அம்புலிமாமா செய்திகள்

## சுருக்கெழுத்தில் சாதனை

லோக்சபையின் நிருபராகப் பணிபுரிந்து வரும் ஹரீஷ் சந்திர பிஸ்த் 23வது அகில இந்தியச் சுருக்கெழுத்துப் போட்டியில் முதலாவதாக வந்து ஒரு புதிய சாதனையை நிகழ்த்தியுள்ளார். அவர் இந்த முதலாவது இடத்தைத் தொடர்ந்து மூன்று தடவைகளாகப் பெற்று வருகிறார். 21 வயதான ஹரீஷ் சந்திர பிஸ்த் நிமிடத்திற்கு 250 வார்த்தைகள் என்ற வேகத்தில் எழுதிய இளம் வயதினராவார்.





## அதிசயத் தொடர்

கர்நாடக மாநிலத்தில் தார்வார் அருகேயுள்ள கடக் பகுதியில் பிறவிக் குருடரான பஞ்சாட்சரக்கனி எனப்பாட்டு வித்வான் 1914ல் ஒரு இசைப்பள்ளியை நிறுவினார். அது முதல் ஒவ்வொரு முறையும் அதிலிருந்து தேறி வரும் மாணவர்களில் ஒருவராவது பிறவிக் குருடாகத்தான் இருந்து வந்திருக்கிறார்கள். இன்றும் புகழ்பெற்ற பாடகரான ஷிமோகா வேணுகோபால் கூட இப்பள்ளியில் இசை பயின்ற மாணவரே. இவரும் பிறவிக் குருடரே.

# இலக்கிய உலகம்

1. உஜ்ஜயினி, ஸ்டார்போர்டு அவான், ட்ராய், அயோத்தி மைலாப்பூர் ஆகிய இடங்களோடு தொடர்புள்ள பழங்காலக் கவிஞர்கள் யார்?
2. ஆங்கில இலக்கிய ஆசிரியர்களின் சமாதிகள் அதிகமாக உள்ள மயானம் எது?
3. இண்டோ-ஆங்கில எழுத்தாளர் என்றால் என்ன பொருள்?
4. பழங்கால பாரத நாட்டில் புகழ் பெற்ற சமஸ்கிருதப் பழங்கால இலக்கண ஆசிரியர் யார்?
5. அவர் வாழ்ந்த காலம் எது? அவர் எழுதிய நூலின் பெயர் என்ன?

# விடைகள்

## உங்களுக்குத் தெரியுமா?

1. நீலத்திமங்கலம்
2. ஜிராப்
3. அமெரிக்காவைச் சேர்ந்த ஜான் பிரோவர் மிசோச் (1941-83)
4. 635 கிலோ கிராம்
5. அமெரிக்காவைச் சேர்ந்த பெர்ஸி பேர்ல் (1926-72)
6. 399 கிலோ கிராம்

## இலக்கியம்

1. காளிதாஸ், ஷேக்ஸ்பியர், ஹோமர், வால்மீகி, திருவள்ளுவர்.
2. லண்டனிலுள்ள வெஸ்ட் மினிஸ்டர் அபே.
3. ஆங்கிலத்தில் இலக்கியப் படைப் புகளை அளிக்கும் இந்தியர்
4. பாணினி
5. கி.மு. 4வது நூற்றாண்டில் அஷ்டாத்யாய்.



உலகப் புராணக் கதைகள் :

# பெர்சியஸ்

ஆர்கோஸ் நாட்டு மன்னன் அக்ரிசியஸிடம் சோதிடர்கள் "உங்கள் மகளுக்குப் பிறந்துள்ள ஆண் குழந்தையால் உங்களுக்கு மரணம் ஏற்படும்" என்று கூறினர் கள். உடனே மன்னன் தன் மகளை நாடு கடத்தி விட்டான்.

இளவரசி தன் பச்சிளம் குழந்தை யுடன் ஒரு படகில் செல்கையில் ஒரு பெரிய புயல் எழுந்தது. அப்புயல் அந்தப் படகை செரிபோஸ் என்ற தீவின் கடற்கரையில் கொண்டு போய்ச் சேர்த்தது.





ஒரு மீனவன் கரையில் கிடந்த இளவரசியையும் அவளது மகனை யும் கண்டான். அவர்களை அவன் அந்நாட்டு மன்னனிடம் ஒப்படைத் தான். மன்னனும் அவர்களைப் பரிவுடன் ஏற்று ஒரு கோவிலில் அவர்கள் வசிக்கச் செய்தான்.



சில வருடங்கள் கழிந்தன. இளவரசியின் மகன் வளர்ந்து பெரியவனான். பெர்சியஸ் என்ற பெயர் கொண்ட அவன் சாகஸச் செயல்களைப் புரியவே அத்தீவின் மன்னன் அவன் மீது பொறாமை கொண்டான்.

ஒருநாள் அந்த மன்னன் பெர்சியஸை விருந்திற்கு அழைத்தான். அந்த விருந்தில் கலந்த கொண்ட அரசகுமாரர்கள் அத்தீவின் மன்னனுக்கு ஒவ்வொரு குதிரை வீதம் பரிசளித்தார்கள். பெர்சியஸ் எதுவும் கொடாததால் ஏளனமாகச் சிரித்தார்கள்.





பெர்சியஸூம் மன்னனிடம் "ஒரு குதிரைக்கு பதிலாக நான் உங்களுக்கு வேறு என்ன கொடுக்க வேண்டும்?" என்று கேட்டான். "மெடுசா என்ற பெண் பூதத்தின் தலையைக் கொண்டு வா" என்றான் மன்னன். அந்த பூதத்தின் கண்களை ஒருவன் பார்த்தால் உடனே அவன் கல்லாகி விடுவானாம்! பெர்சியஸ் அஞ்சாமல் அவள் தலையைக் கொண்டு வருவதாகக் கூறினான்.

மெடுசா எங்கே இருக்கிருள் என்று பெர்சியஸிற்குத் தெரியாது. ஆனல் அவளுடைய மூன்று சகோதரிகள் வாழும் இடம் அவனுக்குத் தெரியும். அவர்களுக்கு ஒரு கண். ஒரு பல்தான். இவை மூவருக்கும் பொதுவானவை. இவற்றை ஒரு பெட்டியில் போட்டு முறை போட்டுக் கொண்டு உபயோகித்து வந்தார்கள். பெர்சியஸ் அந்தப் பெட்டியை எடுத்து ஒளித்து வைத்து விட்டு அவர்கள் மெடுசா இருக்கும் இடத்தைக் கூறினுலே அது கிடைக்கும் என்று கூறினன்.





பெர்சியஸ் தேவதைகளேப் பிரார்த்தித்து அரிய சக்திகளே பெற்ருன். அவன் மெடுசாவை அணுகி அவளே நேராகப் பார்க்காமல் அவள் உருவத்தைத்தன் கேடயத்தில் பார்த்தான்.

அவள் அவளது தலையை வெட்டினன். அதிலிருந்து சொட்டிய இரத்தத் துளிகள் பாம்புகளாக மாறின. அவன் பயப்படாமல் தலேயுடன் மன்னனின் அரண்மனேக்குச் சென்ருன். தேவதைகள் அவனுக்கு உதவின.





அவன் எதியோபியா கடற்கரையில் அழகிய பெண்ணைக் கண்டான். அவள் ஆண்ட்ரோமெடா. அவள் கட்டப்பட்டிருந்தாள். அவளை ஒரு பயங்கரப் பிராணி விழுங்க இருந்தது. அவளது பெற்றோர்களால் அவளைக் காப்பாற்ற முடியவில்லை.

பெர்சியஸ் கடலில் குதித்துக் கத்தியால் குத்தி அதனைக் கொன்றான். அது கத்திக் கொண்டே இறந்தது. பெர்சியஸ் ஆண்ட்ரோமேடாவை விடுவித் தான்.





ஆண்ட்ரோமேடாவின் பெற்றோர்கள் மகிழ்ந்து தம் மகளை பெர்சியஸிற்கு விவாகம் செய்து வைத்தார்கள். பெர்சியஸ் மேலும் பல சாகஸச் செயல்களைப் புரிந்தான். அவை பற்றியும் அடுத்த இதழில் கூறுவோம்.



# முழு முட்டாள்!

கந்தர்வக் கோட்டையில் கந்தசாமி என்ற குடியானவன் இருந்தான். கொஞ்சம் வயல்களும் வீடும் இருக்க அவனால் வசதியாக வாழ முடிந்தது. ஆனால் கூடவே கஞ்சத்தனம் என்பதும் அவனிடம் இருந்தது.

ஒருநாள் அவன்தன் வயலுக்குப் போய்க் கொணடிருக்கையில் ஒரு மரத்தடியே யாரோ ஒருவன் படுத்து குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருப்பதை அவன் கண்டான். மிகக் குட்டையான உருவம். கை கால்களும் குட்டை. அவனைப் பார்த்தால் சாதாரணமனிதன் போலத் தென்படவில்லை.

அப்போது கந்தசாமி தன் மனதில் "இவன் ஒரு கந்தர்வனாகவோ அல்லது ஒரு யட்சனாகவோ இருக்க வேண்டும். முன் காலத்தில் இங்கே கந்தர்வர்களும் யட்சர்களும் திரிந்து மக்களுக்கு வரங்களைக் கொடுத்து வந்தார்களாம். இப்போதோ அவர்களைக் காணவே முடிய வில்லையே. இவன் ஒரு யட்சனாகத் தான் இருக்க வேண்டும். இவனைப் பிடித்துப் போய் எனக்கு வேண்டிய வரத்தை வாங்கிக் கொள்கிறேன்" என நினைத்துக் கொண்டான்.

அவன் அந்தக் குள்ளனைத் தட்டி எழுப்பி கெட்டியாக அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு "ஏய்! நீ ஒரு யட்சன்தானே?" என்று கேட்டான். குள்ளனும் ஆமாம் எனவே கந்தசாமி "என் வீட்டிற்கு பதில் பேசாமல் வா" என்று கூறி இழுத்துச் சென்றான்.

அங்கு கந்தசாமி அவனைத்தன் பெரிய இரும்புப் பெட்டியுள் போட்டு "நீ எனக்கு புதையல் இருக்கும் இடத்தைச் சொல். அதை எடுத்துக் கொண்ட பின் உன்னை விட்டு விடுகிறேன்" என்றான்.

—கே. சுதா—

குள்ளனே பதில் எதுவும் கூறவில்லை. அப்போது கந்தசாமி பெட்டகத்தைப் பூட்டி "நீ அதைச் சொல்லும் வரை இதில் அடைபட்டுக் கிடக்க வேண்டியதுதான்" என்று கூறிப் போனான்.

ஒரு நாள் கந்தசாமி தன் வயலுக்குப் போன போது அங்கு ஒரு ஏர்முனை கிடப்பதை கண்டான். அது நன்கு இழைக்கப்பட்டு 'மழ மழ' வென்று இருந்தது. அதை எடுத்துப் பார்த்து அவன் "பூ! இதுதானா! இதை நம் தச்சன் தங்கசாமி கடையில் கொடுத்தால் இரண்டு ரூபாய் கொடுப்பான். இந்த உபயோகமற்ற கட்டை எனக்கு எதற்கு?" என்று நினைத்தான். அவன் அதனைக் கொண்டு போய்த் தங்கசாமியிடம் விற்று இரண்டு ரூபாய் வாங்கிக் கொண்டு தன் வீட்டிற்குப் போய்ப் பெட்டகத்தைத் திறந்தான். அப்போது பெட்டகத்துள் இருந்த குள்ளன் பலமாகச் சிரித்தான்.

இதற்குக் கொஞ்ச நாட்களுக்குப் பிறகு கந்தசாமியின் உறவினன் ஒருவன் அவனைப் பார்க்க வந்தான். வந்த வேலை முடிந்ததும் அந்த உறவினன் போய்வருவதாகக் கூறவே கந்தசாமியும் ஒப்புக்கு "ஏன்? இருந்து சாப்பிட்டு விட்டுப் போகலாமே" என்று மெதுவாக இழுத்தான். உறவினன் கந்தசாமியைப் பற்றி நன்கு அறிந்தவன். அதனால் அவன் "வேண்டாம். ஊருக்குப் போய்ச் சாப்பிட்டுக் கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு வீட்டிலிருந்து வெளியே வந்து



பத்தடி சென்ருன்.

அப்போது ஒரு முரட்டுக்காளே எங்கிருந்தோ துள்ளி ஓடி வந்து அந்த உறவினனே முட்டித் தள்ளியது. படுகாயமுற்ற அவனேக் கந்தசாமி தன் வீட்டினுள் தூக்கிக் கொண்டு போய்ப் படுக்க வைத்தான். வைத்தியரை அழைத்து வந்து அவனுக்குச் சிகிச்சை அளித்தான். இரண்டு மாதகாலத்திற்கு கந்தசாமி அவனேத் தன் வீட்டிலேயே இருக்க வைத்து பணம் செலவு செய்து சிகிச்சை அளித்துப் பிறகு அவனே அவனது ஊரில் கொண்டு போய்விட்டு வந்தான். அப்போது பெட்டகத்துள் இருந்த குள்ளன் பலமாகச் சிரித்தான்.

கந்தசாமி எப்போதுமே வீட்டில் அதிகமாகப் பணத்தை வைத்துக் கொள்வதில்லே. தன் வயலில் ஒரிடத்தில் புதைத்து வைத்திருந்தான். கொஞ்சம் பெருந்தொகை தேவைப்படும் போது வயலுக்குப் போய் அந்த இடத்திலிருந்து பணத்தை எடுத்துக் கொண்டு மறுபடியும் மண்ணேப் போட்டு மூடி மறைத்து விட்டு போவான். ஒரு நாள் அவன் தான் புதைத்து வைத்த இடத்திலிருந்து கொஞ்சம் பணத்தை எடுத்து கொண்டு அந்த இடத்தை வழக்கம் போல மண்ணேப் போட்டு மூடிவிட்டுப் போனுன்.

அதை ஒரு திருடன் பார்த்துக் கொண்டிருந்தான். கந்தசாமி போனதும் அந்த இடத்திற்குப் போய் தோண்டிப் பார்த்து அங்கிருந்த பணத்தை எல்லாம் எடுத்துக் கொண்



டான். பிறகு இடத்தை முன்போல மண்ணைப்போட்டுப் பரப்பி விட்டுப் பணத்தோடு போய்விட்டான்.

அன்று மாலை கந்தசாமி வீட்டிற்குள் நுழைந்ததும் பெட்டகத்துள் இருந்த குள்ளன் பலமாக சிரித்தான். அதைக் கேட்ட கந்தசாமி "நீ இது வரை மூன்று தடவைகளில் சிரித்தாய். இதற்கு என்ன காரணம்?" ஏன்று கேட்டான்.

அப்போது குள்ளன் "ஒரு நாள் உனக்கு ஒரு ஏர் முனை கிடைத்தது. அதை நீ இரண்டு ரூபாய்க்கு விற்றாய். அதனுள் வைரம், புஷ்பராகம் போன்ற நவரத்தினங்கள் இருந்தன. அவை தங்கசாமிக்குக் கிடைக்க அவன் லட்சாதிபதியாகி விட்டான். அடுத்து நீ உன் உறவினனை வற்புறுத்தி அன்று சாப்பாடு போட்டிருந்தால் அந்த விபத்து நேர்ந்திராது. உனக்கும் அவன் வைத்தியத்திற்காகச் செலவு செய்த பணம் மிச்சமாகி இருக்கும் நீ ஒரு வேளை சாப்பாட்டை மிச்சப்படுத்த நினைத்தாய். அதனால் நீ ஏகப்பட்ட செலவு செய்ய வேண்டியதாயிற்று. இப்போதோ நீ வயலில் நீ இரகசியமாகப் புதைத்து வைத்திருந்த பணத்தை ஒரு திருடன் எடுத்துக் கொண்டு போய்விட்டான். அட முழு முட்டாளே! இந்த அறிவு கெட்ட மூன்று செயல்களைக் கண்டு தான் நான் சிரித்தேன்" எனக்கூறினான். அதைக்கேட்ட கந்தசாமி தன் பெட்டகத்தைத் திறந்து குள்ளனைப் பார்த்தான். குள்ளனும் திகைத்து நின்ற கந்தசாமி பார்த்துக் கொண்டிருக்கும் போதே மாயமாய் மறைந்து போனான்.

கந்தசாமியோ "ஐயோ! என் பணம் எல்லாம் போய்விட்டதா?" என்று கத்திக் கொண்டே தன் வயலை நோக்கி ஓடினான். அங்கு தான் புதைத்து வைத்த இடத்தில் ஒரு செப்புக்காசுகூட இல்லாதது கண்டு கண்ணீர் வடித்தவாறே வீடுவந்து சேர்ந்தான்.






மைநாகன் தன்னை வரவேற்று உபசரித்தது கண்டு அனுமார் "மை நாகனே! நீ சொன்ன வார்த்தை களே போதும். நான் இங்கு தங்கி உணவு உண்ணுமல் போவதற்கு என்னை மன்னித்து விடு. நான் இன்று மாலைக்குள் இலங்காபுரியை அடைந்து விடவேண்டும். நான் நடுவழியில் எங்கும் தங்க மாட் டேன் என்று என் சக வானரர் களுக்கு வாக்குக் கொடுத்திருக் கிறேன்" என்றுர். பிறகு அவர் மைநாகனைத் தொட்டு விட்டு ஆகாய மார்க்கமாகச் செல்ல லானுர்.

மைநாகனும் அவரை ஆசீர்வதித்து அனுப்பினுன். சமுத்திரராஜனும் அனுமாரை வாழ்த்தி விடை கொடுத் தான். அனுமாரும் ஆகாயத்தில் மேலும் உயரப் போய் லங்கா புரியை நோக்கிச் சென்றுர்.

அனுமார் வெகுதூரம் சென்று விட்டார். தேவர்களும் கந்தவர்களும் அனுமாருக்கு எவ்வளவு பலம் இருக்கிறது என்று பார்க்க ஆசைப் பட்டார்கள். அவர்கள் பாம்பு களின் தாயான சரஸையிடம் சென்று "வாயுதேவனின் மகனை அனுமார் ஆகாய மார்க்கமாகப் கடலைக் கடந்து கொண்டிருக் கிருர். நீ மலை போன்ற ராட்சஸி யின் உருவில் போய் பயங்கரக் கோரைப் பற்களையும் நெருப்புத் துண்டங்கள் போன்ற கண்களை யும் கொண்டு அவரை மிரட்டு அவரால் உன்னை வென்றுவிட்டு



தம்பி இலட்சுமணனுடனும் தம் மனைவி சீதையுடனும் வனவாசம் செய்யக் காட்டிற்கு வந்தார். அப் போது இராவணன் இரு சகோ தரர்களையும் ஏமாற்றி சீதையைக் கவர்ந்து கொண்டு போய் விட் டான். நான் சீதையைத் தேடிக் கொண்டுதான் இலங்கைக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். எனக்கு வழிவிடு'' என்றார்.

ஆனால் ராட்சஸியோ "முடியாது. இங்கு வருபவர்கள் என் வாய்க் குள் போய்த்தான் ஆக வேண் டும். நீ முடிந்தால் என் வாய்க்குள் போய்விட்டுத் தப்பிவா. அப்போது நான் தோற்றதாக ஒப்புக் கொண்டு உன்னைப் போக விடுகிறேன்'' என் றாள். அனுமாரும் மிகச் சிறிய உரு வம் எடுத்து அவளது வாயில் நுழைந்து அவள் வாயை மூடுமுன் கோரைப்பல் சந்து வழியாக வெளியே வந்து விட்டார்.

முன்னால் செல்ல முடிகிறதா என்று பார்க்கலாம்'' என்றார்கள். சரஸை யும் தேவர்கள் கேட்டுக்கொண்ட படிப் பயங்கர உருவம் எடுத்துக் கொண்டு அனுமார் போகும் வழியை மறித்தாள்.

அனுமாரும் மலைபோன்ற அந்த ராட்சஸியைக் கண்டு நீ யார் என்று கேட்கவே அவளும் "தேவர்கள் உன்னை ஆகாரமாகத் தின்னும்படி என்னை அனுப்பி இருக்கிறார்கள். என்னிடமிருந்து யாரும் தப்ப முடியாது. என்வாய்க்குள் போய் விடு'' என்றாள்.

அனுமாரும் "நான் ஒரு முக்கிய வேலையாகப் போய்க் கொண்டிருக் கிறேன். அயோத்தி மன்னர் தசரதரின் மகன் இராமர் தம்

உடனே சரஸை அரக்கி உரு வத்தை விட்டு சுயரூபத்தை எடுத் துக் கொண்டு "அனுமாரே! நீ சுகமாகப் போய் வா. நீ போகும் வேலை வெற்றிகரமாக முடியும். சீதையையும் இராமரையும் நீ ஒன்று சேர்த்து வைக்கப் போகிறாய்'' என்றாள்.

அனுமாரும் அங்கிருந்து ஆகாய மார்க்கமாக இலங்காபுரியை நோக் கிப் பயணமானார். அப்போது அவ ரது நிழல் கடல்மட்டத்தின் மேல்

விழுந்தது அதனைக் கண்ட சிம் மிகை என்ற நீர்வாழ் அரக்கி "ஆகா! இன்று எனக்கு நல்ல உணவு கிடைத்தது" என எண்ணி அந்த நிழலை இழுத்தாள். அப் போது ஆகாயத்தில் சென்று கொண் டிருந்த அனுமார் திடீரெனத் தாம் பின்புறமாக இழுக்கப்படுவதை உணர்ந்தார். அப்போது அவர் சுற்றிலும் பார்த்தார். கடலில் ஒரு விசித்திரமான பெரிய பிராணி தன் நிழலைப் பற்றி இழுப்பதை அவர் கண்டார். அப்போது அவ ருக்கு சுக்கிரீவன் அப்படிப்பட்ட ஒரு விசித்திரப் பிராணி இருப்ப தாகக் கூறியது நினைவிற்கு வந்தது.

அனுமார் தன் உடலைப் பெரி தாக்கினார். அதைக்கண்ட சிம்மிகை தன் உடலையும் பெரிதாக்கிக் கொண்டு தன் வாயை அனுமா ரின் உடலின் அளவிற்கு பெரி தாக்கித் திறந்தது. உடனே அனு மார் சட்டென மிகச் சிறிய உரு வம் எடுத்து அதன் வாயினுள் புகுந்து உடலுக்குள் சென்றார். அதன் இதயத்தை அவர் ஒரு நொடியில் பிளந்துவிட்டு அது தன் வாயை மூடு முன் அவர் சட் டென வெளியே வந்துவிட்டார். பிறகு அவர் தாம் எப்போதும் இருக்கும் உருவை எடுத்துக் கொண் டார். இதயம் பிளக்கப்பட்ட சிம்மிகை இறந்து நீர்மட்டத்தின் மேல் மிதந்தாள்.



இதன் பிறகு அனுமார் தன் பயணத்தை மீண்டும் துவக்கினார். தொலைதூரத்தில் மரம் செடிகள் அடர்ந்த இலங்கைத் தீவை அவர் கண்டார். பலநதிகள் ஓடி சமுத் திரத்தில் வந்து விழுவதையும் கண்டார்.

அப்போது அவர் தம் மனதில் "நான் இந்த உடலோடு இலங்கைத் தீவில் போய் இறங்கக்கூடாது. நான் வருவதை ராட்சஸர்கள் அறிந்து கொண்டுவிடுவார்கள். அதனால் என் உருவை மிகவும் சிறிதாக்கிக் கொள்கிறேன்" என்று நினைத்து மிகச் சிறிய உருவத்தை யும் எடுத்துக் கொண்டுவிட்டார்.

அவர் இலங்கைத் தீவை அடைந்து ஒரு மலையின் உச்சி மீது போய்



படி காவல் காத்து வரும் ராட்சஸர் களை அவர் கண்டார். மிக உயர மான வெள்ளை மாளிகைகளையும் அவற்றினூடே செல்லும் பாதை களையும் அவர் பார்த்தார். கோட்டை மதில்களில் ஆங்காங்கே கோபுரங் கள் இருந்தன. அவற்றின் மீது கொடிகள் பறந்தன. திரிகூடமலை மீது இலங்காபுரி இருந்ததால் அது ஆகாயத்தில் கட்டப்பட்ட அற்புத நகரமோ என்று எண்ணும் விதத் தில் அமைந்திருந்தது. அந்த அழ கிய நகரை உருவாக்கியவன் தேவ லோக சிற்பியான விசுவகர்மா.

அனுமார் இலங்காபுரிக் கோட் டையைச் சுற்றிப் பார்த்தவாறே அதன் வடபுறக் கோட்டை வாசலை அடைந்தார். இராவண னின் படை பலம் எவ்வளவு என் பதைக் காண அவர் விரும்பினர். இந்த இலங்காபுரியை வெல்வது எளிதான செயல் அல்லவே. ஒரு காலத்தில் இது குபேரனுக்குச் சொந்தமான நகராக இருந்தது. ஆனல் இப்போதோ குபேரன்கூட அதில் நுழைய முயலவில்லை. எங்கு பார்த்தாலும் ஆயுதங்கள் கொண்டு ராட்சஸ வீரர்கள் நின்று நகரைக் காத்து வந்தார்கள்.

மேலும் இதனைக் காக்க ஒருபுறம் மாபெரும் கடல் இருந்தத. யார் இலங்கைக்கு வருவதாக இருந்தாலும் அதனைக் கடந்தே வந்தாக வேண் டும். வானரர்கள் இந்தக் கடலைக்

நின்று பார்த்தார். தேவேந்திரனின் அமராவதிப் பட்டணத்தையும் தோற்கடிக்கும் விதத்தில் அமைந் திருந்த இலங்காபுரி அவருக்குத் தென்பட்டது. அது திரிகூடமலை மீது அமைந்திருந்தது. சுற்றிலும் மலைகளும் அவற்றில் பசுமை படர்ந்த காடுகளும் இருந்து அவ ரது கண்களுக்குக் குளிர்ச்சியைத் தந்தன. அவர் லங்காபுரியை நோக் கிச் சென்ருர்.

இலங்காபுரி கோட்டையைச் சுற்றி ஆழமான அகழிகள் இருந் தன. அவற்றில் தாமரை மலர்கள் இருந்து மேலும் அழகை அதிகரித் தன. நகரில் தங்க மண்டபங்கள் இருந்தன. உயரமான கோட்டை மதில்கள். நகரில் யாரும் நுழையாத



அதன் பிறகுதான் மேற்கொண்டு என்ன செய்வது என்பது பற்றி யோசிக்க வேண்டும்'' என்று தீர்மானித்துக் கொண்டார்.

ஆனால் இதற்காக இலங்கா புரிக்குள் சென்று ஒரு இடம் விடா மல் தேட வேண்டுமே. அது எப்படி? மூதலில் இவ்வளவு பெரிய உரு வில் உள்ளே செல்ல முடியாது. காவல் பலமாக உள்ளது. ஆகை யால் மிகச் சிறிய உருவில் இந்த நகருக்குள் செல்ல வேண்டும் என நினைத்து சிறிய குரங்குக் குட்டியைப் போலத் தன் உருவை எடுத்துக் கொண்டார். அந்த உருவில் மிக எளிதில் எங்கு வேண்டுமானாலும் போய் வரலாம். ராட்சஸக் காவலாளி களிடம் அகப்படாமல் தப்பவும் முடியும். அதுவும் நன்கு இருட்டிய பின் நகருக்குள் போனாலும் யாரா லும் தன்னைக் கண்டு கொள்ள முடியாது என அவர் நினைத்து இருட் டும் வரை காத்திருந்தார்.

அந்த இருட்டில் அவர் ஓடிக் குதித்து இலங்காபுரிக்குள் போக முயன்றார். நகர வீதிகள் சுத்தமாக இருந்தன. வீடுகளைச் சுற்றி மதில் சுவர்கள் கட்டப்பட்டிருந்தன. மாளிகைகளின் தூண்கள் தங்கத் தாலும் வெள்ளியாலும் ஆகியவை. கதவுகளும் சன்னல்களும் தங்கத் தகடுகளால் மூடப்பட்டிருந்தன. மணிகளும் விலையுயர்ந்த ரத்தினங் களும் ஆங்காங்கு பதிக்கப்

கடந்து வந்து இலங்கையைத் தாக்க முடியுமா? தேவர்களால்கூட அதனை வெல்ல முடியவில்லை. இராமர் எவ்வளவுதான் பராக்கிரமசாலி யாக இருந்தாலும் மாபெரும் கடலைக் கடந்து வந்து இங்கு போர்புரிந்து இதனை வெல்ல முடியுமா?

சற்று நேரத்திற்குப் பிறகு அனு மார் அந்த வீண்யோசனை இப்போது எதற்கு என எண்ணி ''இப்போது ஏன் கவலைப்படுவானேன்? முத லில் வந்த வேலையை கவனிக்க வேண்டும். சீதை எங்கு இருக்கிறாள் என்றும் அவள் உயிருடன் இருக் கிறாளா அல்லது இல்லையா என் பதைக் காண வேண்டும். சீதா தேவி உயிருடன் இருந்தால் அவரைக் கண்டு பேசுவதுதான் முதல் வேலை.

பட்டிருந்தன. மொத்தத்தில் இலங்காபுரி கந்தவர்களின் நகரம் போலக் காட்சி அளித்தது.

இப்படிப்பட்ட கட்டுக் காவலுள்ள நகரத்துள் புதிதாக வருபவர் யாரும் நுழைந்துவிட முடியாது. எனவே சீதையைத் தேடிக் கண்டு பிடிப்பது சற்றுக் கடினமான வேலையே என்று அனுமார் தெரிந்து கொண்டார்.

அவர் நகருக்குள் நுழைய முயன்றபோது ஓர பயங்கர ராட்சஸி அவரைத் தடுத்து "நில். யார் நீ? இங்கே எதற்ாக வந்தாய்? உன்னைப் போன்ற குரங்குகளுக்கு எல்லாம் இந்த நகரில் இடம் கிடையாது. போ. போ" என்று அதட்டியது.

அனுமாரும் "நான் போகத் தான் போகிறேன். இங்கேயே இருந்து விடப்போவதில்லை. இப்படி என்னை அதட்டும் நீ யார்? கோட்டை வாசலில் நிற்கும் நீ காவல் புரிபவளா?" என்று கேட்டார்.

இதற்கு அவள் "மகாப் பராக்கிரமசாலியான இராவணச் சக்கரவர்த்திக்கு ஊழியம் புரிபவள் நான். இந்தக் கோட்டையைக் காத்து வருபவள் நான். என்னை மீறி யாரும் இதற்குள் போய்விட முடியாது... என் பெயர் இலங்கிணி. நீ மரியாதையாகப் போய் விடு இல்லாவிட்டால் உன்னைக் கொன்று விழுங்கி விடுவேன் ஜாக்கிரதை" என்று கூறினாள்.



அனுமாரும் "எனக்கு இந்த இலங்காபுரியைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. அதனால் உள்ளே போய்ப் பார்த்துவிட்டு வந்து விடுகிறேன்" என்றார். அதைக்கேட்ட இலங்கிணி "முடியாது. நீ உள்ளே போக வேண்டுமானால் என்னை வென்று விட்டுத்தான் போக முடியும். தெரிந்ததா?" என்றாள்.

அனுமாரும் "வீண் சண்டை எதற்கு? நான் நகருக்குள் போய் ஒன்று கெடுதல் செய்துவிட மாட்டேன். இந்த ஊரைப் பார்த்து விட்டுப் பேசாமல் போய் விடுகிறேன்" என்றார். அப்போது இலங்கிணி கோபம் கொண்டு "நான் சொல்கிறது காதில் விழ

வில்லையா? நீ போகப் போகிறாயா இல்லையா?" என்று கூறி அனுமாரை ஒரு குத்து குத்தினாள்.

அனுமார் பயங்கரமாகக் கத்தி திரும்பி ஒரு குத்துவிட்டார். அந்த குத்து இலங்கிணியைத் திக்கு முக்காட வைத்தது. அவள் "ஓ! பார்ப்பதற்கு மிகச் சிறியவனாக இருக்கிறாயே. உனக்கு இவ்வளவு பலமா?" என்று கேட்டாள். அனுமாரும் சிரித்துக் கொண்டு நிற்கவே இலங்கிணியும் "நீ சாதாரணக் குரங்கல்ல. உன் பலம் எவ்வளவு என்று தெரிந்துவிட்டது. என்னை ஒரு குரங்கு அடித்து வீழ்த்தினால் அப்போது முதல் இந்த இலங்கா புரிக்குக் கேடுகாலம் ஆரம்பமாகும் என்பது இந்நகருக்கு உள்ள சாபம். இராவணன் சீதையை அபகரித்து வந்த நாளிலிருந்தே இதன் அழிவு காலம் ஆரம்பமாகிவிட்டது. நீ என்னை வென்று விட்டாய். நீ தாராளமாக நகருக்குள் போய் உன் இஷ்டப்படி எங்கு வேண்டுமானாலும் திரியலாம்" என்றாள்.

அனுமார் அது கேட்டு மகிழ்ந்தார். ஆனால் தலைவாசல் வழியாக அவர் உள்ளே செல்லவில்லை. மதில் சுவரின் மீது ஏறி உள்ளே குதித்தார். அவர் அந்நகரில் தம் இடது காலைத்தான் முதலில் வைத்தார். பிறகு அவர் நகர வீதிகளில் சென்று பார்க்கலானார். நகரில் இசையும் சிரிப்புமாக ஒலித்தது. வீடுகள் உயரமாக இருந்தன. பல அடுக்கு மாளிகைகள் தென்பட்டன. அவற்றிலிருந்து இன்னிசை வந்து கொண்டிருந்தது. சில வீடுகளிலிருந்து வேதமந்திரங்கள் ஒலித்தன. வேறு சில இடங்களில் கூச்சலும் கும்மாளமுமாக இருந்தது.

வீதிகளில் ராட்சஸ வீரர்கள் அலைந்து திரிந்து கொண்டிருந்தார்கள். அனுமாரும் "ஒரு வழியாக இலங்காபுரிக்குள் நுழைந்து விட்டேன். இனி சீதையைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்" எனத் தமக்குள் கூறிக் கொண்டார்.





# கற்றது கைம்மண்

நாகபுரம் என்ற ஊரில் நமச்சிவாயம் என்ற பண்ணைக்காரர் இருந்தார். அவரது ஒரே மகன் வீரமணி. அவன் நன்கு படித்தவன். ஆனால் தானே மிகவும் உயர்ந்தவன் என்ற மண்டைக் கனம் கொண்டவன். தன் தந்தை செய்யும் விவசாயமும் வட்டி வியாபாரமும் அவனுக்குச் சற்றும் பிடிக்கவில்லை.

வீரமணி தன் வீட்டிற்கு வருபவர்களை எல்லாம் மட்டம் தட்டி வந்தான். அவன் மெத்தப் படித்தவன் எனக் கூறிஎல்லோரும் ஒதுங்கி வந்ததால் அவனது கர்வம் மேலும் அதிகமாயிற்று. நமச்சிவாயம் தன் மகனிடம் "நீ இப்படி எல்லோரையும் தூக்கி எறிந்து பேசினால் ஊரையே நீ பகைத்துக் கொள்வாய் அப்புறம் உன்னோடு பேச ஒருவர் கூடகிடைக்க மாட்டார்" என்றார்.

வீரமணியோ "அது பற்றி எனக்கு கவலையில்லை. நான் மாபெரும் பண்டிதர். என்னை மதிப்பவர்கள் இந்த ஊரில் பல பெரிய மனிதர்கள். நம் ஊர் லட்சாதிபதி லட்சுமணன், பலசரக்குக் கடை பலராமன், மணியம் மன்னார், பயில்வான் பரசுராமன், இவர்கள் எல்லாம் என் நண்பர்கள். இவர்கள் நினைத்தால் இந்த ஊரையே ஆட்டி வைப்பார்கள். இவர்கள் இருக்கும்போது எனக்கு என்ன கவலை?" என்றான்.

நமச்சிவாயமோ "இவர்கள் எல்லாம் வடிகட்டின அயோக்கியர்கள். நேர்வழியில் போகாதவர்கள். நீ அவர்களைப் புகழ்கிறாய். அதனால் அவர்கள் உன்னைப் பாராட்டுவது போலப் பாசாங்கு செய்கிறார்கள். அவர்களும் உன்னைப் போலப் பிறரைச்சீண்டி வேடிக்கை பார்த்து மகிழ்பவர்களே. சமயத்தில் உன்னைக்

—பாபநாசம் சாமா—



காலே வாரிவிட்டு விடுவார்கள்'' என்ருர்.

வீரமணியோ ''அதெல்லாம் இல்லே. அவர்கள் என்னே ஒன்றும் கைவிட்டு விடமாட்டார்கள். அவர்கள் என்னே மெத்தப் படித்தவஞக நினேக்கிருர்கள். எனவே நானும் அவர்களேப் புகழ்ந்து கூறுகிறேன். இதனுல் எங்கள் நட்பு நாளுக்குநாள் வளர்ந்து கொண்டே போகிறது'' என்ருன்.

நமச்சிவாயம் தன் மகனே இப்படியே விட்டு விட்டால் கெட்டுப் போய் விடுவான் என எண்ணினுர். வீரமணியை எப்படி நல்வழிப் படுத்துவது என்று அவர் யோசித்துக் கொண்டிருக்கையில் அவரது மைத்துனன் மனேகரன் வெளியூரிலிருந்து வந்து சேர்ந்தான். அவனும் இரண்டொரு நாட்கள் தன் மருமகன் வீரமணி பிறரை நடத்தும் விதம் கண்டு ''ஓகோ! பயல் இப்படிப்படவஞ? இவனேத் திருத்தியே ஆகவேண்டும்'' எனத் தீர்மானித்துக் கொண்டான்.

அவன் நமச்சிவாயத்திடம் ''நான் உங்கள் மகனுக்கு என் மகளேக் கல்யாணம் செய்து வைக்க நினேக்கிறேன். அவனிடம் எல்லா நற்குணங்கள் இருந்தலும் அகம்பாவம் என்பது தலேதூக்கி நிற்கிறது. அதை அடக்கி இவனே நல்ல வழிக்குக் கொண்டு வர வேண்டும் இவனே நான் சோலேயூரிலுள்ள சோமநாதர் என்ற பண்டிதரிடம் அனுப்புகிறேன். அங்கு போய் அவரைப் பார்த்து இவன் பேசிவிட்டு வந்தால் திருந்தி விடுவான்'' என்ருன்.

உடனே நமச்சிவாயம் வீரமணியை அழைத்து வரச்சொன்னுர். அவன் வந்ததும் மனேகரன் ''வீரமணி! நீ என்னவோ மெத்தப்படித்தவன் என்று துள்ளுகிருயே. உன்னுல் சோலேயூர் சோமநாதரிடம் வாதம் புரிந்து வெல்ல முடியுமா?'' என்று கேட்டான். வீரமணியும் ''யாராக இருந்தாலும் அவர் வாதத்தில் என் முன் நிற்கமுடியாது. நான் மெத்தப்படித்தவஞயிற்றே'' என்ருன்.

மனேகரனும் சிரித்துக் கொண்டே ''அதுதான் எங்களுக்குத் தெரி

யுமே. மற்றவர்களுக்குத் தெரிய வேண்டாமா? நீ போய் சோம நாதரைப் பார்த்துப் பேசிவிட்டுவா. அவர் முன் நீ எம்மாத்திரம்?'' என்றான். வீரமணியும் ''ஓகோ! சவால் விடுகிறீர்கள்? நான் வாதம் புரிந்து அவரைவென்று வருகிறேன்'' எனக்கூறி உடனே சோலையூருக்குக் கிளம்பிவிட்டான்.

வீரமணி சோலையூர் போய் சோமநாதரைப் பற்றி விசாரித்ததுமே எல்லோரும் ''பண்டிதர் ஐயா வீடா? அதோ அந்த தெருவில் தான் இருக்கிறது'' என்று சுட்டிக் காட்டினார்கள். ஆர்பாட்டமாக அங்கு சென்ற வீரமணிக்கு ஏமாற்றமே ஏற்பட்டது. ஏனெனில் சோம நாதரின் வீடு பெரிய மாளிகையாக இருக்கும் என நினைத்தான். ஆனால் ஒரு சிறு குடிசையாக இருப்பது கண்டு அவன் திகைத்துப் போனான்.

சோமநாதர் அட்டகாசத்துடன் வந்த வீரமணியை அன்புடன் வர வேற்றார். அவன் வந்த காரணத்தைத் தெரிந்து கொண்டு அவர் ''உன் முகத்தில் வீசம் ஒளியிலிருந்து நீ ஒரு மகா பண்டிதன் என்பது தெரிகிறது. நீ படித்த காவியங்கள், நூல்கள் ஆகியவைப் பற்றிய விவரங்களைக் கூறுகிறாயா?'' என்று கேட்டார். வீரமணியும் அவற்றைக் கூறவே அவரும் ''இவ்வளவுப் படித்த உன்னோடு நான் போட்டி போடமுடியுமா? நீ



நான்கு நாட்கள் என் வீட்டில் தங்கி நீ படித்த விஷயங்களை எல்லாம் விவரமாகக் கூறினால் நான் கேட்டு மகிழ்வேன்'' என்றார்.

வீரமணியோ ''நான் போட்டி போடுவதையே விரும்புகிறேன்'' எனவே அவரும் ''சரி நீ நான்கு நாட்கள் இங்கு தங்கிய பின் நாம் ஐந்தாம் நாள் இந்த ஜமீன்தாரரின் ஊருக்குப் போகலாம். அங்கு சமஸ்தான பண்டிதருக்கான தேர்வு நடக்கப் போகிறது. எனக்கு அழைப்பு வந்துள்ளது. நீயும் என்னோடு அங்கு வந்து அந்தப் போட்டியில் கலந்து கொள்ளலாம். இதனால் உன் எண்ணமும் கைகூடும்'' என்றார். வீரமணி மகிழ்ச்சியுடன் அதற்கு ஒப்புக் கொண்டான்.



ஆனால் ஒரு விஷயம் மட்டும் வீரமணிக்குப் புரியவில்லை. சோம நாதரை ஒருவிவசாயி காண வந்த போது "நீ எனக்குப் பல காய் களைக் கொண்டு வந்து கொடுத்திருக் கிறாய். உன் போன்ற விவசாயி கள் என் போன்றவர்களுக்கு உயிர் கொடுப்பவர்கள். மனிதனுக்குப் படிப்பை விட உணவே முக்கியம். உயிர்காக்கும் உன்னை என்னை விட அற்புதப் படைப்பாக அந்த பிரம்மதேவன் சிருஷ்டித்திருக்கிறான் பார்" எனக் கூறி அந்த விவசாயியைப் புகழ்ந்து அனுப்பினார். இதுபோல பல சாதராணப்பட்டவர்கள் வந்து சோமநாதரைக் கண்டபோது அவர் அவர்களைவிட மேலானவர்கள் இல்லை என்று புகழ்ந்து அனுப் பினார்.

ஜமீன்தாரரின் ஊருக்குப் போகும் நாளன்று அவர்கள் தம் சாமான்களை இரு மூட்டைகளாக கட்டினார்கள். மூட்டைகள் கனமாக இருந்தன. அவற்றைப் படகுவரை தூக்கிச் செல்ல ஒருமனிதன் தேவைப்பட்டது. வழக்கமாக வரும் ஆள் உடல்நலமில்லாததால் புதிய ஒருவனை அவன் அனுப்பி இருந்தான். அவன் முனகிக் கொண்டே மூட்டைகளை எடுத்துத் தன் தலைமீது எடுத்து வைத்துக் கொண்டான். அவன் பின்னால் வீரமணியும் சோமநாதரும் நடத்து சென்றார்கள்.

சோமநாதர் வீட்டிலிருந்து படகுத் துறை வெகுதூரத்தில் இருந்தது. குறித்த நேரத்திற்குள் அங்கு போய் சேராவிட்டால் அந்தப் படகு கிளம்பிப் போய் விடும். அதற்குப் பிறகு நான்கு மணிநேரம் காத்திருந்தாலே அடுத்த படகில் செல்ல முடியும். அதனால் சோமநாதர் அந்த ஆளைச் சற்று வேகமாகச் செல்லுமாறு கூறினார்.

அப்போது அவன் "உங்களுக்கு என்ன மூட்டை சுமக்கும் கஷ்டம் தெரியும்? இவற்றைச் சுமந்து நடந் தால் உங்களுக்கு எவ்வளவு சிரமம் என்பது புரியும்" என்றான். அப் போது வீரமணி "நீ என்ன சும்மாவா சுமந்து வருகிறாய்? இதற்குக் கூலிப் பணம் வாங்கிக் கொள்ளத்தானே

போகிறாய்?" இப்படி கர்வத்தோடா பேசுகிறாய்? என்றான். ஆனால் சோமநாதர் இடைமறித்து "ஆமாம் அப்பனே. மூட்டை தூக்குவது சிரமமானவேலையே எங்களால் செய்ய முடியாத வேலையைத்தான் நீ செய்கிறாய். ஆனால் சற்றுத் தாமத மானால் படகு போய்விடும். அப்போது நீ பட்ட கஷ்டமும் நான் செய்த முயற்சியும் வீணாகிவிடும். அதனால்தான் உன்னைக் கொஞ்சம் வேகமாக நடக்கச் சொன்னேன். அதற்காக என்னை மன்னித்துவிடு. உனக்கு ஏன் வீண்சிரமம்? உன் இஷ்டம் போல நட. பிறகு அதிர்ஷ்டம் இருந்தால் நமக்குப் படகு கிடைக்கும்" என்றார். இதைக் கேட்டதும் மூட்டைத்தூக்குபவன் வேகமாக நடந்து குறித்த நேரத்தில் படகுத்துறையை அடைந்தான்.

அங்கிருந்த படகோட்டியும் சோமநாதரைக் கண்டதும் பணிவுடன் வணங்கி "ஐயா! தாங்கள் வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அதற்காகவே சற்றுநேரம் படகை நிறுத்தி வைத்தேன். ஸ்ரீ ராமருக்கு குகன் காத்திருந்தது போல நானும் இருந்தேன்" என்றான்.

சோமநாதரும் "என்னை ஒரேயடியாக ஸ்ரீ ராமராக ஆக்கிவிட்டாயே. ஆற்றை கடக்கும் உன் திறமைக்கு முன் என்புலமை எம்மாத்திரம்?" என்று அவனைப் புகழ்ந்து கூறி படகில் ஏறிக் கொண்டார். இதெல்



லாம் வீரமணிக்குச் சற்றும் பிடிக்கவில்லை. அவனும் வாய்திறவாமல் படகில் ஏறிஉட்காரந்தான். அப்போது சோமநாதர் படகோட்டிக்கு வீரமணியைச் சுட்டிக்காட்டி "இவர் என்னை விடப் பெரிய பண்டிதர்" என்று கூறினார்.

படகு மறுகரையை அடைந்தது. அப்போது சோமநாதரை வரவேற்க ஜமீன்தாரரின் திவான் வந்திருந்தார். அவர் சோமநாதரை வணங்கி "ஐயா! ஜமீன்தாரர் தாமே நேரில் வந்து தங்களை வரவேற்க எண்ணி இருந்தார். ஆனால் வேலை மிகுதியால் வர முடியாமல் போய்விட்டது. அதனால் எல்லா ஏற்பாடுகளையும் என்னை செய்யச் சொன்னார். அவரிடம் எதாவது சொல்ல வேண்டி



இருந்தால் என்னிடம் சொல்லச் சொன்னுர்'' என்ருர்.

சோமநாதர் சிரித்தவாறே "எனக்கு பதிலாக மன்னர் இந்தப் படகில் வந்திருந்தால் ஜமீன்தாரர் என்ன முக்கிமான வேலே இருந் தாலும் விட்டு விட்டு ஓடி வந்து வரவேற்றிருப்பார் அல்லவா? எதற்கு இந்த மழுப்பல்? பண்டிதர் களே கௌவிப்பது போஜமகா ராஜாவோடு போய்விட்டது. நரி புலித்தோலே போர்த்திக் கொண் டால் அது புலியாகி விடுமா என்ன? உங்கள் ஜமீன்தாரர் கௌரவம் பார்ப் பவர். என் போன்ற ஏழைப் பண்டி தரை எல்லாம் தாமே நேரில் வந்து வரவேற்க முடியுமா? நான் சொல் வதை அவர் கேட்க வேண்டுமானுல் அவரே நேரில் வரட்டும். உங்க ளிடம் எதுவும் சொல்லி அனுப் பப் போவதில்லே'' என்ருர்.

சோமநாதர் இவ்வாறு கூறியதைக் கேட்டு வீரமணி ஆச்சரியப்பட்டான். சோமநாதர் தன்மானம் கொண்ட வர் என்பதை அவன் தெரிந்துக் கொண்டான். இனி என்ன நடக் குமோ என்று பயந்த திவான் நடு நடுங்கியவாறே அவர்கள் தங்க ஏற்பாடுகளேச் செய்தார். ஜமீன் தாரரும் வந்தார். தாம் நேரில் வந்து வரவேற்காதற்காக அவர் சோமநாதரிடம் மன்னிப்புக் கோரினுர்.

சோமநாதர் எதுவும் பேசாமல் மௌனமாகத் தலேயை ஆட்டினுர். ஜமீன்தாரர் போனதும் வீரமணி சோமநாதரிடம் "உங்களேப் புகழ்ந்த சாதாரணப்பட்டவர்களே எல்லாம் நீங்கள் புகழ்ந்தீர்களே. ஒரு மூட்டை தூக்குபவன் உங்களே எதிர்த்துப் பேசியபோதுகூட நீங்கள் கோபித் துக் கொள்ளவில்லேயே, மேலும் அவனிடம் மன்னிப்பும் கோரினீர் களே ஆனுல் ஜமீன்தாரரிடம் மட் டும் கடுமையாக நடந்து கொண்டீர் களே. இது தங்கள் அகம்பாவத் தைத் தானே காட்டுகிறது. அவர் வைத்துள்ள போட்டியில் நீங்கள் வெற்றிபெற நினேக்கவில்லேயா?'' என்று கேட்டான்.

சோமநாதரும் "பண்டிதர் என்பவர் தன்னேவிடத் தாழ்ந்த

வர்களிடம் பணிந்து போக வேண்டும். அவர்களைப் புகழ்ந்து மரியாதை செய்ய வேண்டும். தன் மீது அதிகாரம் செலுத்தும் பெரிய மனிதர்களைத்தன் கர்வத்தால் அடக்க வேண்டும். இதுதான் நான் செய்தது" என்றார்.

"இப்படி ஏன் செய்ய வேண்டும்?" என்று வீரமணி கேட்கவே அவரும் "பண்டிதர் தன் புலமையால் பணக்காரர்களை அடக்கினாலே உண்மையில் சிறந்தவராகிறார். நான் போட்டியில் என் புலமையைக் காட்டி வெற்றிப்பெறுவேனேயல்லாது ஜமீன்தாரரைப் புகழ்ந்து வெற்றி பெற மாட்டேன். அவரைப் புகழ்ந்து நான் வெற்றி பெற்றால் அது எனக்குத் திருப்தியை அளிக்காது. என்புலமையாலே வெற்றி பெற்று பதிவியை அடைய வேண்டும். அது தான் சரி" என்றார்.

அதைக் கேட்ட வீரமணி தன்னைப் பற்றி எண்ணி தலைகுனிந்து கொண்டான். தான் பணக்காரர்களைப் புகழ்ந்தும் சாதாரணப்பட்டவர்களை இகழ்ந்தும் வந்தது எவ்வளவு பெரிய தவறு என்பது அவனுக்குப் புரிந்தது. சோமநாதர் தன்னிடம் பணிவுடன் நடந்தது அவர் அவனைத் தன்னிலும் தாழ்ந்தவன் என்பதால் தான் என்பதை அவன் புரிந்து கொண்டான். அவன் போட்டியில் கலந்து கொள்ளாமல் சோமநாதரிடம் விடைபெற்றுக் கொண்டு தன் ஊருக்குத் திரும்பிச் சென்றான்.

தன் ஊரில் அவன் சாதாரணப் பட்டவர்களிடம் மரியாதை காட்டியதோடு பணக்காரர்கள் பேச்சில் மயங்கி அவர்களைப் புகழாமல் தன்மானம் காத்துப் பேரும் புகழும் பெற்றான். சில ஆண்டுகளுக்கு பிறகு ஜமீன்தாரரின் சமஸ்தானப் பண்டிதராகவும் ஆகிவிட்டான்.





# அவரு மக்கு?

வெகு காலத்திற்கு முன் மலைப் பகுதியில் ஒரு கிராமத்தில் ஒரு ஏழைக் குடும்பம் இருந்தது. குடும்பத் தலைவன் விவசாயி. அவனுக்கு மூன்று மகன்கள். முதல் இருவரும் புத்திசாலிகள். கடைசி மகன் கைசாங்கோ மக்கு. அதனால் வீட்டில் எல்லோரும் அவனை மக்கு என்றே கூப்பிட்டு வந்தார்கள்.

கைசாங் ஒருப்போதும் தன்னைப் பற்றிக் கவலைப்பட்டதே இல்லை. ஊருக்கு உழைக்கும் அவனை அவனது இரு சகோதரர்களும் தந்தையும் வீட்டிற்கு உதாவதவன் என்று கூறி அவனை வீட்டை விட்டுத் துரத்தி விட்டார்கள்.

இவ்வாறு அவனது வீட்டாரால் கைவிடப்பட்ட கைசாங்கிடம் சிலர் ''இங்கிருந்து பத்து மைல் தூரத்தில் ஒரு மலை இருக்கிறது. அங்குள்ள ஒரு குகையில் ஒரு மகான் இருக்கிறார். அவர் மிகவும் சக்தி வாய்ந்தவர். நீ போய் அவரை தரிசித்தால் உனக்கு நல்லகாலம் பிறக்கும்'' என்றார்கள். அதனால் கைசாங் அந்த மகானைக் காணக் கிளம்பினான்.

போகும் வழியில் அவன் ஒரு கிராமத்தைக் கண்டான். அங்கு மக்களும், மற்ற உயிரினங்களும் தண்ணீர் இல்லாது தவிப்பதை அவன் கண்டான். ஊரின் ஏரி வறண்டு கிடப்பதை அவன் பார்த்தான். இதற்குக் காரணம் அந்த ஏரிக்குத் தண்ணீரைக் கொண்டு வரும் ஆற்றில் நீர்வராததே என்பது அவனுக்குத் தெரிந்தது. அதனால் மகானைக் கண்டு அந்த கிராம மக்களின் துயர் போக்க வேண்டும் என்று கைசாங் தீர்மானித்துக் கொண்டான்.

அவன் அங்கிருந்து போய் இன்

மங்கோலிய நாட்டுக் கதை

ஞெரு கிராமத்தை அடைந்தான். அந்த ஊர் எல்லையில் ஒரு ஏழைக் கிழவி தன் மகளோடு ஒரு குடிசையில் வாழ்ந்து வந்தாள். மலைவாழ் மகானைப் பற்றி அவன் அவர்களிடம் கூறிய போது அக்கிழவிதன் மகள் பிறவிக் குருடி என்றும் அவளுக்குப் பார்வை கிடைக்கும் வழியை அந்த மகானிடம் கேட்டு வரும்படி அவனிடம் கேட்டுக் கொண்டாள். கைசாங்கும் அந்த உதவியைச் செய்வதாகக் கூறி அங்கிருந்து சென்றான்.

முடிவில் அவன் சிரமப்பட்டு அந்த மலையை அடைந்து குகையிலுள்ள மகானைக் கண்டான். அவரும் அவனோடு பேசி அவன் வந்த காரணத்தை அறிந்து கொண்டு பிறருக்கு உதவும் அவனது மனப்பான்மையைக் கண்டு அவர் வியந்தார். பிறகு அவர் அவற்றிற்காக என்னென்ன செய்ய வேண்டும் என்பதனையும் கூறினார்.

கைசாங் அங்கிருந்து கிளம்பி வறண்டு கிடந்த கிராமத்தை அடைந்தான். அந்த கிராமத்து ஏரிக்கு நீர்கொண்டு வரும் ஆறு ஆரம்பமாகும் இடத்திற்குச் சென்றான். அங்கிருந்து நீர் விழும் இடத்தில் சில யானைகள் படுத்து நீரை நதியில் பாய விடாமல் வேறு பக்கமாகத் திருப்பிவிடுவதை அவன் கண்டான். அவன் யானைகளை மிரட்ட உலர்ந்த மரக்கிளையும்



இலை தழைகளையும் ஒரிடத்தில் குவித்து சக்கிமுக்கிக் கற்களை எடுத்து உராய்சி தீமூட்டினான்.

பயங்கரமாய் தீ உயர்ந்து எரிந்தது. அதைக் கண்ட யானைகள் பயந்து எழுந்து ஓட்டம் பிடித்தன. அப்போது ஆற்றில் நீர் பாய்ந்து அந்த வறண்ட கிராமத்து ஏரியை நிரப்பியது. தம் ஊர் ஏரியில் நீர் நிரம்பியது கண்டு அந்த ஊராரின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லாது போயிற்று. கைசாங் இந்த நற்பணியை அந்த மகான் கூறிய வழியைக் கடைப்பிடித்து செய்து முடித்து அந்த ஊருக்கே மாபெரும் உதவியைச் செய்தான்.

இதற்குப் பிறகு கைசாங் அங்கிருந்து கிளம்பி ஏழைக் கிழவி

யும் குருட்டுப் பெண்ணும் வசிக்கும் கிராமத்தை அடைந்தான். கைசாங்கைக் கண்டு கிழவி மகிழ்ந்து போனுள். கைசாங்கும் அந்தக் குருட்டுப் பெண்ணை அணுகி அவள் தலைமீது தன் இரு கைகளையும் வைத்தான். அவன் கைகள் அவள் தலைமீது பட்டதுமே அவளது கண்களுக்குப் பார்க்கும் சக்தி வந்து விட்டது.

அந்தப் பெண்ணிற்குப் பார்வை கிடைக்கச் செய்பவனே அவளது கணவன் என்றும் அவளுக்கு நிறைய ஐஸ்வரியம் கிடைக்கும் என்றும் அந்த மகான் கைசாங்கிடம் கூறி அவனை அந்தப் பணியைச் செய்து முடிக்குமாறு கட்டளை இட்டு அனுப்பினுர். அதன்படி அவன் செய்து அந்தக் கிழவியின் மகளை மணந்து கொண்டு அவர் கூறியபடி நிறையப் பணமும் அடைந்து விட்டான்.

கைசாங் தான் அடைந்த திரண்ட செல்வத்துடனும் தன் மனைவியுடனும் தன் கிராமத்தை அடைந்தான். அதுவரை மக்கு என்று அறியப் பட்ட அவன் சாதித்த மாபெரும் சாதனைகள் எல்லா ஊர்களிலும் பரவி விட்டன. மக்கள் திரண்டு நின்று அவனுக்கு வரவேற்பு அளித்தார்கள்.

கைசாங் தன் வீட்டை அடைந்த போது இரு அண்ணன்மார்கள் பேசமுடியாமல் வாயடைத்துப் போய் நின்றுர்கள். அதைக் கண்டு கைசாங்கின் தந்தை "இவ்வளவு நாட்களாக நாம் இவனை மக்கு என்று கூறி அலட்சியப் படுத்தினுேம். இவனு மக்கு? இவன் பிறருக்கு உதவுபவன். நாமோ சுயநலக் காரர்களாக இருந்து விட்டோம். இனியாவது நாம் நல்வழிப்படுவோம்" என்று கூறி தன் கடைசி மகனுன் கைசாங்கையும் அவன் மனைவியையும் ஆசீர்வதித்து வரவேற்று வீட்டினுள் அழைத்துச் சென்றுன்.





## மலையேறும் ஆடு!

நீண்ட கொம்புகளையும் மெத்தென உள்ள பாதங்களையும் கொண்ட இந்த மலை இன ஆடு செங்குத்தான மலைகள் மீது கூடமிக எளிதில் ஏறிவிடுகிறது. இதன் குளம்புகளின் அமைப்பு பல்லியின் கால்கள் போல இருப்பதால் இது கீழே விழாமல் பாறைகளைப் பற்றி ஏறுகிறது.



## பல்லி வால்

லிபோர்ட் கெக்கோ என்ற ஒருவகைப் பல்லியின் வாலில் உணவும் நீர் பசையும் உள்ளது. தனக்கு அபாயம் நேரிட்டால் இது இந்த வாலைத் துண்டித்துப் போட்டுவிட்டுப் பிறகு அதே போல மற்றொரு வாலை வளர்த்துக் கொள்ளுமாம்.

## மிகப் பெரிய முத்து

லாவ்ட்ஜ் என்ற இயற்கை முத்துதான் உலகிலேயே மிகப் பெரியது. இது 9.5 அங் (240 மி.மீ) நீளமும் 5.5 அங் (140 மி.மீ) குறுக்களவும் கொண்டது. இதன் நிறை 14 பவுண்டு (6.37 கி.கி) இது 1936ல் ஒரு பெரிய முத்துச் சிப்பியிலிருந்து எடுக்கப்பட்டது.



## நைல் நதியின் கீழ் ஒரு நதி

ரேடியோ ஐசோடோப்களின் உதவியோடு 1958ல் எகிப்தின் நைல்நதிக்கு அடியில் ஒரு நதி ஓடுவதைக் கண்டு பிடித்தார்கள். அதில்நைல்நதியின் ஓடும் நீரின் அளவைப் போல ஆறு மடங்கு நீர் ஓடுகிறதாம்.



# Cuddles always say "I love you."

Show your little ones how much you love them! And is there a better way of doing that than giving them a huggable, cuddlable playmate?

Cuddles. From the people who have given children the delightful entertainer of a magazine, Chandamama. Cuddles. A whole new range of stuffed toys. And, your old favourites. And, cute surprises being introduced regularly. Each one a sweet, adorable companion to your child. Absolutely safe. Designed to withstand childhandling.

Well, the fun and excitement of the festive season is just round the corner. Make it memorable for your child with a special gesture. With a Cuddle.

- CUDDLES — Stuffed toys from Chandamama.
- SAMMO — Mechanical and electronic toys from Chandamama

**CUDDLES**

Manufactured in technical collaboration with Sammo Corporation, South Korea

**CHANDAMAMA TOYTRONIX**

Chandamama Toytronix Private Limited, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026

*from*

**THE HOUSE OF**

**CHANDAMAMA**

**CUDDLES AND SAMMO TOYS WILL BE AVAILABLE AT ALL LEADING TOY OUTLETS EXCEPT IN THE STATES OF ASSAM, HIMACHAL PRADESH, MADHYA PRADESH AND NORTH EASTERN STATES**

Mudra M CTPL 4274

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும்



Suraj N. Sharma



B. Sreesailam

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மே 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

## மார்ச் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : உண்ண உண்ண மகிழ்ச்சி

இரண்டாவது போட்டோ : ஊட்ட ஊட்ட வளர்ச்சி

பரிசு பெற்றவர் : திரு, அ. சங்கர், கள்ளிக்கோட்டை-2

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 36-00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

வாசகர்களே!

பத்திரிகை காகிதம், இதர பொருட்கள் வளர்ந்துவரும் விலைவாசியின் காரணமாக, 'மங்கை ஜூன்மாத இதழிலிருந்து ரூ. 5/-ஆக உயர்த்தப்படுகிறது' என்பதை தெரிவித்துக் கொள்கிருேம். எப்போதும் போன்ற ஆதரவை தொடர்ந்து உங்களிடம் கோருகிருேம்.